திருச்சிற்றம்பலம்.

# கந்தபுராணம்.

சுப்பிரமணியசுவாமி வரப்பிரசாதியாயும்

குமரகோட்டத்தருச்சகராயும் காஞ்சீபுரத்தில் எழுந்தருளியிருந்த

**கச்சியப்பசிவாசாரியசுவாமிகள்**

அருளிச்செய்தது.

இஃது

யாழ்ப்பாணத்து நல்லூர்

## ஆறுமுகநாவலரவர்களால்

பலபிரதிரூபங்களைக்கொண்டு பரிசோதித்து,

மேற்படியூர்

**சதாசிவப்பிள்ளையால்**

சென்னபட்டணம்:

**வித்தியாநுபாலனயந்திரசாலையில்**

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

இரண்டாம் பதிப்பு.

விகிர்தி௵ பங்குனிமீ

# காண்டவகராதி.

| காண்டம். | பக்கம். |
|---|---|
| தக்ஷகாண்டம் | ௭௨௧ |
| தேவகாண்டம் | ௬௮௭ |
| யுத்தகாண்டம் | ௪௪௧ |

# படலவகராதி.


| படலம். | பக்கம். | படலம். | பக்கம். |
|---|---|---|---|
| அக்கினிமுகாசுரன்வதைப்படலம் | ௫௪௮ | ததீசிப்படலம் ... ... .. | ௭௫௯ |
| அடிமுடிதேடுபடலம் ... ... | ௮௪௯ | ததீசியுத்தரப்படலம் ... ... | ௭௬௫ |
| அனந்தன்சாபநீங்குபடலம் ... | ௮௧௮ | தருமகோபன்வதைப்படலம் ... | ௫௭௩ |
| இந்திரபுரிப்படலம் ... ... | ௭௧௪ | தானப்படலம் ... ... ... | ௮௨௦ |
| இரணியன்புலம்புறுபடலம் ... | ௬௮௧ | திருப்பரங்குன்றுசேர்படலம் ... | ௬௮௭ |
| இரணியன்யுத்தப்படலம் ... | ௫௨௭ | திருமணப்படலம் ... ... | ௭௪௬ |
| இரண்டாநாட்சூரபன்மன்யுத்தப்படலம் ... ... | ௪௭௯ | தெய்வயானையம்மைதிருமணப்படலம் ... ... | ௬௮௯ |
| உபதேசப்படலம் ... ... | ௭௨௧ | தேவர்கள்போற்றுபடலம் ... | ௬௮௦ |
| உமைகயிலைநீங்குபடலம் ... ... | ௭௩௮ | நகர்புகுபடலம் ... ... ... | ௫௩௧ |
| உமைதவம்புரிபடலம் ... ... | ௭௪௩ | பானுகோபன்வதைப்படலம் ... | ௫௮௦ |
| உமைவருபடலம் ... ... | ௮௨௫ | பிரமயாகப்படலம் . ... | ௭௫௨ |
| ஏமகூடப்படலம் ... ... ... | ௪௪௧ | மீட்சிப்படலம் .. . ... | ௬௮௪ |
| கந்தவிரதப்படலம் ... ... | ௮௫௯ | முதனாட்பானுகோபன்யுத்தப்படலம் . . ... .. | ௪௪௮ |
| கந்தவெற்புறுபடலம் ... ... | ௭௧௩ | மூவாயிரர்வதைப்படலம் . . | ௫௬௬ |
| கயமுகனுற்பத்திப்படலம் ... ... | ௭௬௭ | மூன்றாநாட்பானுகோபன்யுத்தப்படலம் ... ... | ௫௧௪ |
| காளிந்திப்படலம் ... ... ... | ௭௪௧ | யாகசங்காரப்படலம் ... ... | ௮௩௪ |
| சந்திரசாபப்படலம் . . ... | ௭௩௨ | வரவுகேள்விப்படலம் ... ... | ௪௪௫ |
| சாலைசெய்படலம் ... ... ... | ௭௫௫ | வள்ளியம்மைதிருமணப்படலம்... | ௮௭௨ |
| சிங்கமுகாசுரன்வதைப்படலம் ... | ௫௬௭ | விண்குடியேற்றுபடலம் . . ... | ௭௧௦ |
| சூரபன்மன்வதைப்படலம் ... | ௬௩௫ | வீரபத்திரப்படலம் ... . . | ௮௨௮ |
| தக்கன்கயிலைசெல்படலம் ... | ௭௫௦ | வேள்விப்படலம் ... ... ... | ௮௨௪ |
| தக்கன்சிவபூசைசெய்படலம் ... | ௮௫௮ | | |
| தக்கன்மகப்பெறுபடலம் . . | ௭௨௭ | | |
| தக்கன்றவஞ்செய்படலம் ... | ௭௨௪ | | |

# பிழை திருத்தம்.

| பக்கம். | செய்யுள். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௪௪௯ | ௨௧ | ௨ | லழறு | லளறு |
| ௫0௬ | ௨௯௫ | ௨ | றுன்று | றுன்ற |
| ௫௨௬ | ௧௫௧ | ௩ | நிதி | நீதி |
| ௫௩௨ | ௧0 | ௨ | மழித் | மளித் |
| ௫௬௩ | நோட்டில் | ௬ | பிடி | பிடுங்கு |
| ௫௬௭ | ௩ | ௧ | மொங்ழி | மொழிங் |
| ௫௮௭ | ௧0௨ | ௨ | வாழி | வாளி |
| ௫௯௮ | ௨௭ | ௨ | கழு | களு |
| ௬0௩ | ௯௮ | ௧ | ப்பருபத | பருப்பத |
| ௬௭௩ | ௧௯௧ | ௧ | வல்ளல் | வள்ளல் |
| ௬௯௫ | ௮௪ | ௨ | மொழிய | மொழியை |
| ௭௩௧ | ௫௭ | ௪ | யிரிவி | பிரிவி |
| ௮௧௩ | ௨௧௩ | ௪ | லெணணி | லெண்ணி |
| ௮௨௧ | ௮ | ௧ | நோலைய | நொலைய |
| ௮௪௪ | ௧௨௭ | ௩ | பெதை | பேதை |
| ௮௬0 | ௭ | ௪ | யேற்றல்தா | யேற்றதொ |
| ௮௮௮ | ௧௮௯ | ௨ | றருளலொடு | றருளலோடு |

உ

திருச்சிற்றம்பலம்.

நான்காவது

# யுத்தகாண்டம்.

## ஏமகூடப்படலம்.

நாரணனென்னுந்தேவுநான்முகத்தவனுமுக்கட்
பூரணன்றானுமாகிப்புவிபடைத்தளித்துமாற்றி
யாரணமுடிவுந்தேறாவநாதியாயுயிர்கட்கெல்லாங்
காரணனாயமேலோன்கழலிணைகருத்துள்வைப்பாம். (க)

திண்ணியவவுணர்தம்மைச்செற்றிடவின்னேசெவ்வேற்
பண்ணவனேகுமெல்லாவமரரும்பாங்கிற்செல்வர்
துண்ணெனயானுமேகாதொழிவதுசூழ்வன்றென்னா
வெண்ணிவந்திடுவான்போலவிரவிவந்துதயஞ்செய்தான். (உ)

இரவிவந்துதயவெற்பினெய்தியகாலைதன்னி
னரியணைமிசையேவைகுமறுமுகங்கொண்டவண்ணல்
பிரமன்மான்மகவான்றேவர்முனிவரர்பிறருங்கேட்ப
வரமிகுசிறப்பின்வீரவாகுவைநோக்கிச்சொல்வான். (ங)

பாவமேபயிலுஞ்சூரபன்மனுமவுணரானோ
ரேவருமுடிவாராகவிமையவரிடும்பைநீங்க
மாவியல்கின்றவீரமகேந்திரபுரத்துக்கின்னே
போவதுபுரிதுநந்தேர்பொள்ளெனக்கொணர்தியென்றான். (ச)

வள்ளன்மற்றிதனைச்செப்பமாலயன்மகவானாதி
யுள்ளபண்ணவர்கள்கேளாவுவகையங்கடலின்மூழ்கித்
தெள்ளிதினெமதுதுன்பந்தீர்ந்ததுதீர்ந்ததென்னாத்
துள்ளினராடிப்பாடியவனடிசூடலுற்றார். (ரு)

ஆயதுகாலைதன்னினரும்பெருங்கயிலைபோற்று
நாயகநந்தியண்ணனற்கணத்தலைமைபூண்டோன்
சேயதோர்மனவேகப்பொற்றேரொடுவலவன்றன்னைக்
கூயினன்கொண்டுவல்லேகுமரவேண்முன்னருய்த்தான். (சு)

முன்னுறமருத்தன்றூண்டுமுரண்டகுதடந்தேர்நண்ண
வன்னதையருளிஞேக்கியறுமுகம்படைத்தவண்ணல்
பன்னெடுஞ்சியந்தாங்கும்பைம்பொனின்றவிசுதன்னின்
மன்னினனிருத்தனீங்கியெழுந்தனன்மறைகள்போற்ற. (எ)

மாறில்பொன்சுடருமேருவரைமிசையிருஷுவெய்யோர்
வேறிலாதொருபாற்பட்டுவிளங்கிவந்திவருமாபோ
லாறுமாமுகத்தெம்மையனனையதொல்லிரதமீக்க
ணறினனேறிச்சூழ்வோர்க்கினையதொன்றியம்புகின்றான். (அ)

வார்திரையளக்கர்நாப்பண்வரம்பிலாவளவைத்தாகிச்
சீர்திகழ்மகே திரப்பேர்த்திருநகர்முன்னரேகிச்
சூர்தனையவொன்போதுந்துண்ணெனநீவிர்நுந்த
மூர்திகடம்மின்மேவியூர்ந்திவண்வருதிரென்றான். (க)

இப்படிமுகமாறுள்ளவெம்பிரானிசைத்தலோடு
மப்பணியிசையாவேதனன்னத்துமாழிமேலோ
னொப்பருமுவணமீதுமும்பர்கோன்மானமீதுஞ்
செப்புறுமேனைவிண்ணோர்தத்தமூர்தியினுஞ்சேர்ந்தார். (௧௦)

அந்தமிலிலக்கத்தோருமவரலாவெண்மர்தாமு
மந்தரமுறமூழ்வீரவாகுவாம்வன்மையோனு
மெந்திரவயமான்றேரின்வீற்றுவீற்றேறியார்க்குஞ்
சிந்தையினுனுமெட்டாத்தேவர்கடேவற்சூழ்ந்தார். (௧௧)

சுப்பிரன்மேகமாலிசுவேதசீரிடன்கபாலி
யப்பிரசித்துச்சித்திராங்கனேசுவாலதாலு
வொப்பில்வச்சிரனேவிமனுக்கிரனுக்கிரேசன்
பிப்பலனந்திசேனன்பிரமசன்பிரமசேனன். (௧௨)

பதுமனேகராளன்றண்டன்பத்திரன்பரிகநேமி
யுதவகன்புட்பதந்தனுருத்திராகாரன்வீரன்
மதிசயன்கேதுமாலிவக்கிரன்பிரமகேச
னதிபதிகலிங்கன்கோரனச்சுதனசலன்சாந்தன். (௧௩)

சித்திரசேனன்பூரிசுசீலன்மாசயனேசிங்க
னுத்தரமடங்கற்பேரோனுபதிட்டன்சயனேயீசன்
மத்தகன்மதங்கன்சண்டிமகாபலன்சுவேதனீல
பத்திரன்சுவாகுவண்டாபரணனேகாகபாதன். (௧௪)

பிங்கலன்சமானன்மாயன்பிறங்கியநிகும்பன்கும்பன்
சங்கபாலன்விசாகன்சதநாவனயக்கிரீவ
னங்கையாயிரத்தன்செங்கணயுதத்தனனந்தன்வாமன்
மங்கலகேசன்சோமன்வச்சிரமாலிசண்டன். (௧௫)

அசமுகன்சரபன்குந்தனுடகன்கவந்தன்மேகன்
விசயன்வித்துருமன்றண்டிவியாக்கிரன்காலபாசன்
றசமுகன்குமுதன்பானுதனஞ்சயனிடபரூபன்
சுசிமுகனனலகேசன்சுபத்திரன்கேதுமோகன். (௧௬

மத்தனுன்மத்தனந்திமனோபவன்வாயுவேகன்
பத்துநூறடிகள்பெற்றோன்பானுகம்பன்பதங்கன்
சுத்தனேயனிகன்சீதன்சுஜாதனேசுமாலிமாலி
யத்திரியவுணர்கூற்றனரிகேசன்சுவாலகேசன். (கஎ)

இங்கிவர்பூதவெள்ளத்திறையவரொருநூற்றெண்மர்
பொங்குவெஞ்சினத்தரெல்லாப்புவனமுமடவென்றாலு
மங்கொருகோடிப்பின்முன்னரடுபவராடன்மிக்கோர்
சங்கையில்வலியோர்யாருஞ்சண்முகத்தவனைச்சூழ்ந்தார். (கஅ)

ஏயெனப்பகருமுன்னமிவ்வகையெவருஞ்செவ்வேற்
சேயினைச்சூழ்தலோடுஞ்செய்கைமற்றதனைக்காணூஉ
மாயிருட்பரவைஞாலம்வரைக்குலம்பணிப்பவார்த்திட்
டாயிரத்திரட்டிவெள்ளத்தனிகமுமெழுந்தவன்றே. (ககூ)

எழுந்தனவனிகவெள்ளமீண்டியவெங்கும்விண்ணோர்
பொழிந்தனர்பூவின்மாரிபூதர்தந்தெழிப்புவிண்ணு
மொழிந்திடுதிசையும்பாருமுற்றனவுலைந்ததாழி
யழிந்தனகருவிவானமண்டநெக்குடைந்தமாதோ. (உ0)

கல்லெனவிரங்குபேரிகரடிகைதுடியேகாளஞ்
சல்லரிதிமிலைதக்கைதண்ணுமைபடகங்கோடு
வல்லியலுடுக்கைசங்கம்வான்குடமுழவமாதிப்
பல்லியமனந்தகோடிபாரிடமியம்பிச்சென்ற. (உக)

கள்ளலம்புற்றதண்டார்கவினியமொய்ம்பிற்பூத
வெள்ளமங்கேகலோடும்விரிந்தெழுபூழிமாலை
தள்ளருஞ்சுடர்கண்மாற்றியகிலமுந்தானேயாகி
யள்ளலங்கடலின்பேழ்வாயடைத்ததுதிடரேயாக. (உஉ)

கலகலமிழற்றுநோன்றாட்கழல்புனைபூதவெள்ளம்
வலவயினெஃகமேந்தும்வள்ளறாள்வழுத்திச்சூழ்ந்து
செலவுறுகிரிகண்மானச்சென்றுதந்தலைவரோடு
மலைபொருமளக்கர்வேலையகன்கரையிறுத்தவம்மா. (உங)

மடங்கலையுறழுமொய்ம்பின்மாபெரும்பூதவெள்ளந்
தடங்கழல்கலிப்பத்தாளிற்சலசலவொலிப்பமாறு
நெடுந்திரையலமந்துள்ளநேமியங்கடலேயாறு
நடந்தனபொறையாற்றாதுசேடனுநடுக்கமுற்றான். (உச)

படிதவிர்பூதவெள்ளம்படர்தலும்பரட்டின்காறுக்
கடலளவமைந்ததன்றேகனல்விழிச்சுறவுதின்னு
கெடலருந்திமிங்கிலாதிகீடம்போலுலவாநின்ற
வடியுறைபரலேபோன்றவதற்படுகிரிகண்முற்றும். (உரு)

தந்திரப்பூதவெள்ளந்தடங்கடலாற்றிற்சார
வெந்திறற்றுணைவர்யாரும்விரிஞ்சனுமாலுமற்றை
யிந்திரத்தலைவன்றானுமிமையவர்பலருஞ்சூழ
வந்தரத்தாற்றிற்சென்றானறுமுகனணித்திண்டேர்மேல். (உசு)

மாறுபட்டவர்மேற்செல்லும்வயப்பெரும்பூதரேக
வாறுபட்டமருமுங்கீரலமர்ந்துதெளிவின்றாகிச்
சேறுபட்டிறையதொன்றுதேய்க்கிடுமுன்னமஃதே
நீறுபட்டெழுந்துசென்றெவ்வுலகமுந்திமிர்ந்துசூழ்ந்த. (உஎ)

இவ்வகையயில்வேலண்ணலிராயிரம்பூதவெள்ளங்
கவ்வையினமைந்துசெல்லக்கனைகடல்வரைப்பினேகி
யெவ்வமதடைந்ததொல்லையிலங்கையங்குவடுநீங்கி
மைவரைபுரைசூர்மேவுமகேந்திரபுரமுன்போந்தான். (உஅ)

வேறு.

போந்தகாலையயலின்வந்துபோற்றியங்கைகூப்பியே
நாந்தகஞ்சிலைகதைநலங்கொள்சங்குசக்கர
மேந்தினோனுநான்முகனுமிந்திரத்தலைவனு
மாய்ந்துநேடியின்னதன்மையார்வமோடியம்பினார். (உகூ)

காண்டியீதுசூரனூர்கடுங்கணீசர்செறிதலா
லாண்டுசேறன்முறையதன்றதற்கடுத்தவெல்லையா
மீண்டுபாசறைத்தலமியற்றுவித்திருந்தபின்
வேண்டுமாறுபுரிதியையவினையநாடியென்னவே. (௩0)

குன்றெறிந்தமுருகனன்னகூற்றுணர்ந்திசைந்திடா
நன்றிதென்றருட்கண்வைத்துநாகர்கம்மியன்றனை
மன்றவன்பொடேவிளித்துவல்லையீண்டுபாசறை
யொன்றுசெய்திடென்னலுமுளஞ்சிறந்துபுகலுவான். (௩க)

தாரகற்கடந்தவேற்றடக்கைவீரவீண்டியா
னோரிறைக்குமுன்னமாகவோங்குபாசறைத்தலஞ்
சீரிதிற்படைக்குவன்றெரிந்துகாண்டியுனதுபே
ராரருட்டிறத்தினென்றடித்தலம்பணிந்துபின். (௩உ)

மாடகூடமண்டபம்வளங்கொள்சோலைவாவிகள்
பீடுலாயகோபுரம்பிறங்குவீதியோர்திசை
கோடிகோடியாக்கிமற்றோர்கோநகரியற்றியே
நாடுமேமகூடமென்றுநாமமொன்றுநாட்டினான். (௩௩)

கருத்திலன்னவன்செயுங்கவின்கொள்பாடிவீடுகண்
டருத்தியான்மகிழ்ச்சியெய்தியருள்புரிந்துகந்தவே
டிருத்தகுஞ்சனங்கள்போற்றிசெய்யவாண்டுசென்றபின்
மருத்தனுந்துதேரிழிந்துமந்திரத்தைநண்ணினான். (௩௪)

அந்தமற்றபூதர்தம்மையாவணங்கணிறுவியே
முந்துகொற்றவயவர்நான்முகத்தனாதியவரொடு
மந்திரத்துளேகியேமகிழ்ந்துவீற்றிருந்தன
னிந்திரப்பெருமடங்கலேறுதாங்குதவிசின்மேல். (௩௫)

ஒன்பதோடிலக்கவீரரோங்கலாளராறுவர்க
ளன்புசெய்துபோற்றிசெய்யவருமுகேசனமரர்கண்
முன்புசெய்பணித்திறமுறைப்படப்புரிந்திட
வின்பினோடுமேமகூடவெழிலிருக்கைவைகினான். (௩௬)

ஏமகூடப்படலமுற்றிற்று.

---

# வரவுகேள்விப்படலம்.

---

ஏகநாயகனுமையனிவ்விடையிருந்தவெல்லை
நாகர்மேலனிவைத்துள்ளநாரதனவற்றைநாடி
மாகநீள்புரிசைசூழ்ந்தமகேந்திரபுரத்திற்சென்று
போகமாருலகின்மேலாம்புரவலன்கோயில்புக்கான். (௧)

புக்கனனவுணருய்ப்பப்பொருவிலாவிகல்வெஞ்சூரன்
மிக்குயர்திருவினோடும்வீற்றிருந்திடுதல்காணூஉ
விக் * கெனவினையநீயோனிறப்பவென்றுன்னிவாயாற்
றக்கதோராசிகூறிச்சார்ந்தனன்றவத்தின்மேலோன். (௨)

அங்கைகண்மலரநின்றேயாசிசெய்தானைநோக்கி
யெங்குளாயிங்குவந்ததென்னைநீயாரையென்ன
மங்கையோர்பங்கன்மேவும்வடபெருங்கயிலைவாழ்வே
னுங்குலந்தலைமையாகவைகலுநோற்றல்செய்வேன். (௩)

கைதவம்புகலேன்வெய்யகாமமேமுதலநீத்துச்
செய்தவம்பலவுமுள்ளேன்றேவருக்கிடுக்கண்செய்வேன்
மைதவிர்புகரினோடுமருவுநண்புடையேனின்பா
லெய்தியொன்றுரைக்கவந்தேனாரதனெனும்பேருள்ளேன். (௪)

சிந்துவான்மதிதோய்வேணிச்செல்வனின்னடுவதாகக்
கந்தனுமுருகன்றன்னைக்காமர்கண்ணழலானல்க
வந்தமாமதலைதன்பாலையவுன்பணியதாற்று
மிந்திராதியர்களேகியிறைஞ்சியேயேத்தியுற்றார். (௫)

உற்றுளார்தமக்குநின்னாலுறுதுயர்குமரன்கேட்பச்
சொற்றலுமஞ்சலென்றுதொல்சிவனருண்மேற்கொண்டு
கொற்றவெம்பூதவீரர்குழாத்தொடும்புவியினேகி
மற்றுனதிளவறன்னைவரையொடும்வேலாற்செற்றான். (௬)

ஆண்டதுபுரிந்தபின்னராறுமுகன்செந்திமேவித்
தூண்டினனினக்கோரொற்றைத்துண்ணெனவவனும்வந்து
மீண்டபின்புகுதிநாடிவேலையைக்கடந்துதன்பா
லீண்டியபடையொடன்னுனிந்நகர்வடபால்வந்தான். (௭)

ஆங்கனம்பாடிவீடொன்றுற்றுவித்தனிகம்யாவும்
பாங்குறவிருந்தான்செவ்வேள்பார்த்தனனினையவெல்லா
மீங்கிதுநிகழ்ந்தவண்ணமென்றலுமவுணர்கோமான்
றீங்கனலென்னச்சீறிநகைத்திவைசெப்பலுற்றான். (௮)

வேறு.

மேனிமிர்கொண்டலுயர்த்தவனம்புயமிசைவேதா
நீணிறமாயவனாரதுபோலநினைந்தானோ
வானதொலண்டமொராயிரகோடியுமரசாள்வேன்
மாநகர்மேலொருபாலகனும்பொரவருவானே. (௯)

---

* இக்கு - மூங்கில்.

அரியினினஞ்செறிசூழலினன்னவையடலுன்னிக்
கரியதுகன்றுழைகலைபிறவற்றொடுகெடிதேகிற்
பொருதுவயங்கொளவல்லதுகொல்லதுபோலன்றோ
முருகனும்வெம்படையுடனிவண்வந்திடுமுறைதானே. (௧0)

வேலைகடந்தெனதானையிகழ்ந்துவியன்பூதச்
சாலநெடும்படைதன்னுடனிந்நகர்சார்வானுங்
காலமிதங்கவன்வீரமழிப்பல்கருத்தில்லாப்
பாலகனென்றும்விடேன்வசையென்பதும்பாரேனல். (௧௧)

முன்னொருசூழ்ச்சியினசமுகியொண்கரமுரிவித்தே
யொன்னலராயமரும்பர்கள்யாவருமுய்ந்தாரோ
வென்னிளையானெடும்வெற்பினையட்டனமெனவுன்னித்
தன்னுயிர்போவதறிந்திலனிந்நகர்தனின்வந்தான். (௧௨)

ஆழியதெண்டிரையாழிகடைந்தவனலகில்லா
வேள்விபுரிந்திடுவாசவனம்புயமிசைமேயோன்
வாழியநம்பெயர்கூறினுமஞ்சினர்மறைகுற்றார்
பூழிபுனைந்தவர்பாலகனோவமர்புரிவானே. (௧௩)

அந்தரமேல்வருசெங்கதிரைச்சிறையமர்வித்த
மைந்தனைநாற்படைதன்னொடுமேவிவயப்போரான்
முந்தியபூதரையேனையவீரரைமுடிவித்தே
கந்தனையொல்லையின்வெற்றிகொள்வேனிதுகாண்கிற்பாய். (௧௪)

என்றசுரேசனிசைத்தலுநாரதனிவைகேளா
நன்றிதுநன்றிதுதாழ்க்கலையின்னினிநகர்சூழச்
சென்றவனைப்பொரநின்படையேவுதிசெல்கின்றேன்
வென்றிநுமக்குறநோற்றிடுவானெனவிண்போனான். (௧௫)

வேறு.

நாரதனினையகூறிநகையொடுபோதலோடுஞ்
சூரருளாற்றன்மிக்கோன்றுண்ணெனவயலினின்ற
கோரனுற்கோரனென்னுமொற்றரைக்குறித்துநோக்கி
வாரிதியிறைவற்பற்றிவல்லையிற்கொணர்திரென்றான். (௧௬)

என்றலுமனையரோடியெறிகடற்கரசைக்கூவி
வன்றிறலோடுபற்றிவல்லைமுன்கொணர்ந்தேயுய்ப்பக்
கன்றியமனத்தனாகிக்கைதொழுதவலங்கூர்ந்து
நின்றனனவனைநோக்கிநெருப்பெழவிழித்துச்சொல்வான். (௧௭)

பவ்வநீரரசகேண்மோபங்கயத்தவனுமாலுஞ்
செவ்விதினுணராவண்ணமொளித்தவன்சிறுவன்றன்னை
வெவ்வலிகடந்தபூதவெள்ளத்தைநமதுமாறு
விவ்விடைவிடுத்ததென்னையென்னலுமிசைக்கலுற்றான். (௧௮)

மண்படுபுவனம்போற்றுமன்னகேள்புயங்கமீது
கண்படுமுகுந்தன்வேதாக்கடவுளர்தலைவனோடு
மெண்படுதுணைவரானோர்யாவரும்புடையிற்சூழ
விண்படுநெறியிற்சென்றான்வீரவேற்றடக்கையண்ணல். (௧௯)

மடல்கெழூஉபத்தண்டார்வள்ளல்வானெறியிற்போத
மிடல்கெழுபூதரென்பான்மேவினர்சென்றூரன்று
ரடிகளின்பரட்டின்காறுமமைந்திலனவரையானே
தடைசெயவல்லேன்போலுந்தக்கதேயிதுமற்றன்றே. (௨0)

ஊழியுமுலையாப்பூதரொல்லெனச்செல்லத்தாளிற்
பூழியாலழுறுபட்டாங்கிடையறப்புலம்பலுற்றே
ஞழியனென்னும்பேருமற்றனன்வசையேபெற்றே
னேழையேன்செய்வதென்கொலெதிருண்டோவலியர்க்கம்மா. (௨௧)

தெள்ளிதிற்றமிழ்தேர்காட்சித்திருமுனிகரத்தில்வாரி
யுள்ளுறக்கொண்டதேபோலொல்லையின்மிசைவர்போலாங்
கொள்ளையிற்செறிபூதர்க்குளொருவரோர்குட்டங்கைதன்னி
னள்ளுதற்காற்றகில்லேனுதலினுய்ந்தேனன்றே. (௨௨)

உடல்சினவசனிதன்னையொண்பணிவிலக்கவற்றே
கடுமுரணரிமானேற்றைக்களிறெதிர்விலக்கிற்றுண்டோ
மிடல்கெழுவிதியைப்புந்திவிலக்குமோவஃதேயன்றே
வடன்மிகுபூதர்தம்மையளியனேன்றடுப்பதென்றான். (௨௩)

இற்றெலாமளக்கர்கோமானிசைத்துமெய்துளக்கமெய்தி
நிற்றலுநெடுவேலண்ணனீணகர்நணியதன்மை
யொற்றரிற்சிலவர்காணூவோடினரொல்லைசென்று
கொற்றவற்பணிந்துநின்றேயிவையிவைகூறலுற்றார். (௨௪)

அராவணையண்ணல்வேதாவரிமுதலமரர்சூழ
விராவுறுமிலக்கத்தொன்பான்வெலற்கரும்வீரர்போற்ற
விராயிரம்பூதவெள்ளமீண்டிடவெறிநீர்ச்சென்னிப்
பராபரன்மைந்தனந்தம்பதிவடதிசையிற்போந்தான். (௨௫)

வடதிசையதனிற்போந்துவானவர்புனைவற்கொண்டே
படிபுகழ்தகைமைத்தானபாசறைபுரிவித்தாங்கே
புடைதனினணிகமானபூதவெவ்வீரர்மேவ
நடுவணோர்நகரந்தன்னினண்ணிவீற்றிருந்தானன்றே. (௨௬)

கண்டனமிதனையின்னேகடவதுபுரிதியென்னாத்
திண்டிறல்வெய்யதூதர்செப்பலுமதனைக்கேளா
வண்டமும்புவனம்யாவுமலமரவழலிற்சீறிப்
புண்டிகழ்ந்தனையகண்ணானிவையிவைபுகலலுற்றான். (௨௭)

வரவுகேள்விப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௬௩.

# முதனாட்பானுகோபன்யுத்தப்படலம்.

---

கோதைவேலுடைக்குமரனதாற்றலுங்கொற்றப்
பூதராற்றலுமேனையராற்றலும்போர்செய்
தூதனாற்றலுந்தொலைக்குவன்றுண்ணெனவீவி
ராதவன்றனிப்பகைஞனைக்கொணர்திரென்றறைந்தான். (௧)

ஆனகாலையினன்றெனத்தூதுவரகன்று
பானுகோபனதிருக்கைபுக்கனையவற்பணிந்து
மேனிலைப்படுதந்தைதன்பணிவிடைவிளம்ப
மானவாலரித்தவிசுவிட்டெழுந்தனன்மன்னோ. (௨)

தொல்லைமந்திரத்தலைவருஞ்சுற்றமாயினரு
மெல்லைதீர்தருதானையந்தலைவர்கள்யாரு
மொல்லெனப்புடைசூழ்ந்தனருருமுகான்றென்னப்
பல்லியங்களுமார்த்தனபோர்த்தனபதாதி. (௩)

அக்கணத்தினிலிரவியம்பகைஞனோரணித்தேர்
புக்கொராயிரகோடிவீதிகளொரீஇப்புடையிற்
றொக்கவீரரிற்கண்ணோர்வயின்வயின்றொழப்போய்
மிக்கதாதைதன்றிருநகரடைந்தனன்விரைவின். (௪)

தேரினின்றிழிந்தண்ணலங்கோயிலுட்சென்று
சூரபன்மனையணுகியேயவனடிதொழுது
வீரவீரநீயெனையிவண்விளித்ததென்னென்ன
வாரிருங்கழன்மன்னவனின்னனவுரைப்பான். (௫)

முந்துதாரகவெம்பியைவரையொடுமுடித்த
கந்தவேள்செந்திநீங்கியேயளக்கரைக்கடந்து
நந்திதன்கணத்தலைவரும்பூதருநணுக
விந்தமாநகர்வடதிசைவாயில்வந்திறுத்தான். (௬)

சிந்துபோன்றுலகளந்திடுகள்வனுஞ்செயிர்தீர்
கந்தமாமலர்க்கடவுளுமென்பணிகடந்த
விந்திராதியர்யாவரும்பிறருமாயீண்டி
வந்துளார்களாமறுமுகமதலைதன்மருங்கு. (௭)

அளியராகியவமரருமரன்றருமகவு
மொளிறுவாட்படைநந்திதன்கணத்தினுள்ளோருங்
களியின்மூழ்கியபூதருங்கடிதுவந்தடைதற்
கெளிதுபட்டதோநன்றுநன்றினையமாநகரம். (௮)

பின்னைதன்னுடனடுக்கலைமைந்தனைப்பிறரை
முன்னமட்டிடுமொற்றலர்தங்களைமுருக்கச்
சென்னெறிக்கொடுபோதலென்கடனவர்சிறியர்
மன்னர்மன்னன்யானுதலினிருந்தனன்வறிது. (௯)

அந்தண்மாமுனிஞயர்த்தவன்வேண்டனுமமலன்
றந்தகந்தனைச்சாரதத்தலைவர்களோடு
கந்தமைப்பொரவிடுத்தனனாதலினனு
மைந்தநிற்கொடுவென்றிபெற்றிருந்திடல்வழக்கே. (௧0)

ஆதலாலினிப்படையொடுமமர்க்களத்தடைந்து
நாதன்மைந்தனைநந்திதன்கணத்துளார்தம்மைப்
பூதர்தங்களைப்பொருதழித்தடல்வயம்புனைந்து
காதன்மைந்தநீமீடியானம்முனங்கடிதின். (௧௧)

வேறு.

என்றிவைசூர்முதலிசைப்பக்கேட்டனும், பொன்றிகழ்தடம்புயம்பொருப்பிற் சேட்செல, வொன்றியருமிழ்வடிவுடலம்போர்த்திட, நின்றிடுதிருமகனிலைவிகழ்த்துவான். (௧௨)

இருளுறுமிடற்றினனேவுமைந்தனை, மருளுறுபூதரைமற்றுளார்தமை, வெருளுறு சமரிடைவென்றுமீள்வதோர், பொருளெனநினைந்துகொல்புகன்றியிற்றெலாம். ()

பன்னுவதென்னினிப்பரமன்கான்முளை, யிந்நகர்நணுகுமுனெதிர்ந்துபோர்செய்வா னென்னலேவினவினனீயதோர்ந்திலை, பின்னிதுபுகனுதல்பிழையதாகுமால்.(௧௪)

படைப்பெருந்தொறுவொடும்படர்ந்துகந்தனை, யடுத்தனன்பேரமராற்றிவென்றிகொண், டுடுக்கணில்பூதரையேனையோருடன், முடித்திவண்வருகுவன்முதல்வகாண்டிநீ. (௧௫)

கந்தனைவிறல்கொடேயவன்றன்கட்படு, செந்திருமார்பனைத்திசைமுகத்தனை யிந்திரக்கள்வனையிமைப்பிற்பற்றிமுன், றந்திடுகின்றனன்றகுவசெய்தியால். (௧௬)

என்றிவைகூறியேயிறைஞ்சமைந்தநீ, சென்றனைவருதியாற்றிறலினோடெனு, நன் றெனவிடைகொடுநடந்துநன்கமை, பொன்றிகழ்தனதுதேர்புகுந்துபோயினன். ()

தொல்லையிற்பரிசனம்புடையிற்சூழ்தரப், பல்பதினாயிரந்துணைவர்பாற்பட, வொல் லெனவியம்பலவொலிப்பவேகுறா, வெல்லையம்பகைதனதிருக்கையெய்தினன். ()

பண்டியந்தேரினுந்தணந்துபாங்கரின், மண்டுறுதூதரைவல்லைகண்ணுறீஇ யெண்டருநம்படையாவுமிவ்விடை, கொண்டணைவீரெனக்கூறிப்போயினன். ௧௯

எயிறும்பரிசனர்யாரையுந்நிறீஇ, மாயிருங்கலைமகள்வதிந்துவைகிய வாயுதசாலையினவுணர்கோன்மகன், போயினன்றொழுதனன்பூசையாற்றினன். ()

கயிரவநிறத்தபூங்கச்சவீக்கினன், வயிரவொள்வாளினைமருங்குசேர்த்தினன் வெயில்விடுபொன்றுகின்மீதுசுற்றினன், றுயிலறுமமரரைத்துளக்கங்கண்டுளான்.

செல்லிடையுருமெனத்தெழிக்குநோன்கழல், கல்லெனவரற்றிடக்கழலிற்பூட்டினன், வல்லிதிற்சாலிகைமருமஞ்சேர்த்தினன், சொல்லினுநிவந்தெழுதூண் செய்தோளினன். (௨௨)

கோதையையங்கையிற்கொளுவிச்சுற்றினன், போதுறழங்குலிபுட்டிருங்கினன் சோதிகொள்சரம்படுதூணியைச்சுவன், மீதுறவீக்கினன்விறலின்மேலையோன். ()

வெம்பெருநுதன்மிசைவிசயப்பாலதாஞ், செம்பொனின்பட்டிகைதிகழச்சேர்த்தினன்,பய்புறுமணிகலம்பலவுந்தாங்கினன், றும்பையஞ்சிகழிகைமவுலிசூட்டினன்.

வடித்ததோர்பெருஞ்சிலைவயமுண்டாகவென், றெடுத்தனன்விடுத்திடின்யா
வர்தம்மையும், படுத்திடுமோகமாய்படையொன்றேந்தினு, னடுத்திடுசெறுநர்தம்மா
ற்றலுன்னலான். (௨௫)

ஆனதோர்போரணியணிந்துவாய்தலிற், பானுவின்மாற்றலன்படரமுன்னரே, போ
னதோர்தூதுவரெழுதிர்போர்க்கெனத், தானையோடெழுந்தனர்தகுவர்யாவரும்.()

வே று.

விசையனேமியன்மிகுந்திறன்மாயன், முசலிகண்டகன்முரன்கரன்மூர்க்கன்
றசமுகன்கனலிசண்டன்விசண்ட, னசமுகன்மகிடனக்கிரவாகு. (௨௭)

விசையசேனன்விடசேனன்விமோகன், வசைகொள்சோமகன்மதுச்சசிசித்துச்
சுசிமுகன்னசனிகுனியகேது, வசுரசேனனிவராதியரானோர். (௨௮)

தடுக்கொணாவகைதடிந்திடுதெய்வப், படைக்கலங்களவைபற்பலபற்று
வுடைத்தவன்மையுடனெய்யெனவந்தார், கிடைத்ததோவமரெனக்கிளர்கின்றார்.()

ஆனகாலைபதினாயிரவெள்ளந், தானவப்படைஞர்சார்புதொரேகி
மீனவேலைகளும்வெள்குறவார்த்து, மானவத்தலைவர்மாடுறவந்தார். (௩௰)

கோலவார்சிலைகொடுங்கதைநீடுஞ், சூலநேமியயிலேமுமரமீட்டி
யாலம்வாள்கணையமாரெழுநாஞ்சில், காலபாசமிவைகைக்கொடுசென்றார். (௩௧)

கந்துகத்தொகைகடங்கலுழ்கைம்மா, வெந்திரத்திரதமீங்கிவைமூன்று
மைந்தொகைப்படுமிராயிரவெள்ளந், தந்திரத்தலைவர்தம்புடைசூழ்ந்த. (௩௨)

ஐந்துநான்குடையவாயிரவெள்ளத், திந்தநாற்படையுமீண்டுப்புசெல்ல
மைந்தினேற்றமிகுமானவர்தத்தஞ், சிந்தைபோற்கடிதுசென்றனரம்மா. (௩௩)

சென்றகாவலர்கள்சேனையினோடு, மென்றவன்பகைஞனெய்துழிநண்ணி
யொன்றவங்கைதொழுதொல்லெனவார்த்துத், துன்றிவந்துபுடைசூழ்ந்தனரன்றே

இரவிதன்பகைஞனீங்கிவைகாணு, வொருதனேவலனையொல்லையினோக்கித்
திருமைபெற்றதொருதேரினைவல்லே, தருகவென்னவினிதென்றுதணந்தான். ()

செப்புறத்தொழில்சிரங்கொடுசென்றே, மெய்ப்படைக்கருவிமேவுழிநண்ணி
முப்பதாயிரமுரட்பரிபூண்ட, வொப்பிலாவிரதமொன்றினையுய்த்தான். (௩௬)

உய்த்ததேரினுதயக்கிரிவாவு, மொய்த்தவெங்கதிரின்மொய்ம்பொடுபாய்ந்தான்
மெத்துபேரணிகவெள்ளமியாவு, மத்துணைப்பொழுதினார்த்தனவன்றே. (௩௭)

உரத்தகந்திகளோராயிரகோடி, பெருத்துநீண்டசைவுபெற்றிடுபானை
விரித்துநீட்டியெனவெவ்வசுரேசர், கரத்தினெண்ணில்கவரித்தொகைவீச. (௫௮)

மற்றவன்றனதுமாசிருண்மேனி, யுற்றிடற்கருமையாலவனெண்சீர்
சுற்றிமீதுலவுதோற்றமதென்னக், கற்றைவெண்குடைகள்காவலரேந்த. (௩௯)

அடைப்பைகோடிகமடுஞ்சுடரொள்வாள், கடிக்கொள்பீலிகவினுற்றகளாசித்
தொடக்கமேந்திமுறைசுற்றியனந்தம், படைப்பெருந்தலைவர்பாங்கொடுபோற்ற. ()

எழில்செறிந்தவிரதத்திடைவைகு, மழலின்வெங்கதிரையாற்றமுனிந்தோ
னுழையரிற்பலரையொய்யெனநோக்கி, விழுமிதோர்மொழிவிளம்புதலுற்றான். ()

காமர்வெம்படைகணிப்பிலகொண்ட, சேமமாகியமர்தேரொருகோடி
யேமமோடுகொணர்கவெனலோடுந், தாமவேலுழையர்தாழ்ந்தனர்சென்றார். (௪௨)

அண்டரும்படையளப்பிலவுய்த்துத், திண்டிறற்கெழுமுதேரொருகோடி
கொண்டுவெந்துழையர்கொற்றவன்மைந்தற், கெண்டிசைப்புறமுமீண்டுறுவித்தார். ()

ஆண்டகைக்குமரனன்னதுகாலை, மாண்டசீர்வலவன்மாமுகநோக்கிப்
பாண்டின்மாத்தொகுதிபண்ணினவித்தேர், தூண்டுகெந்தனமர்சூழலினென்றான். ()

என்னலும்விழுமிதேயெனமுட்கோன், மன்னும்த்திகையின்வன்றொழில்கா
ட்டித், துன்னுவாம்புரவியின்றொகைதூண்டிப், பொன்னந்தேர்கடவினுன்புகழ்
வெய்யோன். (௪௫)

வெய்யவன்றனைவியன்சிறையிட்ட, கையனேகவதுகண்டுபுறஞ்சூழ்
மையன்மாலவுணமாப்படையாவு, மொய்யெனப்பெரிதுலம்பினவன்றே. (௪௬)

எழுந்ததானவரிகற்படைவெள்ள, மெழுந்ததேர்நிரையெழுந்தனகைம்மா
வெழுந்தவாசிகளெழுந்தனவோதை, யெழுந்தகேதனமெழுந்தனபூழி. (௪௭)

அறைந்தபேரிகையறைந்தனசங்க, மறைந்தகாகளமறைந்தனதிண்கோ
ட்றைந்தசல்லிகையறைந்ததடாரி, யறைந்ததண்ணுமையறைந்தனதக்கை. (௪௮)

ஆர்த்ததேர்த்தொகுதியார்த்தனவாசி, யார்த்ததந்திநிரையார்த்தனர்வெய்யோ
ரார்த்தவாற்றுவசமார்த்தனகண்டை, யார்த்ததார்நிரைகளார்த்ததுமூதூர். (௪௯)

அதிர்ந்தமாநிலமலைந்தனநாக, முதிர்ந்ததாரகையுலைந்தனர்தேவர்
விதிர்ந்தமேகநிரைவிண்டதுமேருப், பிதிர்ந்துபோயினபிறங்கல்களேழும். (௫௦)

ஊழியான்மதலையோங்குபடைப்பே, ராழியோடுறவருக்கன்வெருண்டே
பூழிவான்முகடுபோர்த்தெழல்காணு, வாழியென்றதின்மறைந்துபடர்ந்தான். (௫௧)

வாழிமாநகர்வனைந்திடுதொல்பே, ராழியாங்கடையவப்படையாகிச்
சூழும்வேலையிடைதோன்றியுலாவும், பூழிதூர்த்துளதுபூதர்களேபோல். (௫௨)

விட்டசோதிநிமிர்விண்மிசைதாக்கப், பட்டுலாவருபதாகையினீட்டம்
வட்டவானமெனும்வான்படகத்தைக், கொட்டுமெண்மகள்குலாவுகைபோலும். ()

தாழும்வீரர்படைதம்மினுரிஞ்சப், பாழிவெங்கனல்பரந்தபதாகைச்
சூழல்வானநதிதோய்ந்தசைகாலை, வீழுமாவிகளின்வீழ்ந்திடுகின்ற. (௫௪)

வானமோடியனமால்கரிதள்ளுந், தானமோடினசரங்களினோடி
மீனமோடுதிரைவேலையினோடுங், கானமோடினகளிற்றினமென்ன. (௫௫)

செப்புதற்கரியசேணகர்தன்னிற், றுப்புமிக்கெழுவுதொல்படைவெள்ள
மிப்புறத்துநெறியின்றியவ்வானத், தப்புறத்தினுமளப்பிலசென்ற. (௫௬)

மறந்தருங்கதிரைவன்சிறைசெய்தோன், செறிந்ததானையுடனிவ்வகைசெல்ல
விறந்தசீர்நகரினித்திறமெல்லா, மறிந்துநாரதனகன்றிடுகின்றான். (௫௭)

வானமேனெறிவழிக்கொடுபூதர், மேனபாசறைவியன்பதியுட்போய்
ஞானவாலறிவினாரதன்விண்ணோர், சேனைகாவலனமர்ந்துழிசென்றான். (௫௮)

சிந்துரப்புகைசிரத்தவிசுற்ற, கந்தவேளிருகழற்றுணைகாணுப்
புந்திநாரொடுபுகழ்ந்துவணங்கி, யெந்தைகேட்கவெனவின்னதுரைப்பான். (௫௯)

பூதசேனையொடுபொள்ளெனவேகி, யாதிநீயிவணமர்ந்தனையாவுந்
தூதர்கூறவுயர்சூரபன்மாவென், றோதுநீயவனுணர்ந்துவெருண்டான். (௬௦)

நிகண்டமுற்பகனெடுங்கதிரோன்பா, லுகண்டதன்மகனையெல்லைவிளித்தே
யகண்டசேனையொடுமன்பிலனின்மேல், வெகுண்டுபோர்செயவிடுத்தனனம்மா.()

விடுத்தகாலையவன்வெஞ்சமராற்றற், கடுத்தகோலமொடளப்பிலவான
கடற்பெரும்படைகலந்துடனேகத், தடுப்பரும்வெகுளிதன்னொடும்வந்தான்.(சு௨)

இவனுடன்சமரினேற்பவர்நீயுஞ், சிவனுமன்றியெவர்தேவரினுள்ளா
ரவனைவெல்வதரிதாகுமுனோர்நாட், புவனியுண்டவர்புறந்தரவென்றான். (சு௩)

கரையிலாவமர்கடந்திசைகொண்டான், வரைவிலாதபலமாயைகள்வல்லா
னுரகவேந்தினுரம்பெரிதுள்ளான், பிரமனீந்திடுபெரும்படைபெற்றான். (சு௪)

அறைகடற்கிறைவனங்கைகொள்பாச, மறலிதன்பரசுவவ்வினன்மாயோன்
விறலினேமிகொளவேண்டலன்முன்னஞ், சிறியதந்தையணிகுற்றசிறப்பால்.(சு௫)

ஆகையாலவனையாள்கொடுவெல்லே, வாகைகொண்டிடலுமற்றரிதம்மா
பாகுபட்டபடைபாங்குறநீயே, யேகல்வேண்டுமெடவென்றுபகர்ந்தான். (சு௬)

நாரதன்னிவைநவின்றிடுகாலை, யூரவெய்திமுருகன்புடைநின்ற
வீரவாகுவைவிளித்தருள்செய்து, சீரிதாவினையசெப்புதலுற்றான். (சு௭)

ஈண்டுபூதரொடியாம்வருதன்மை, யாண்டுசூரனுணர்ந்தநகர்தன்னின்
மாண்டதானையுடன்மைந்தனைநம்மேற், றூண்டினனமர்தொடங்கியமன்னோ. ()

எள்ளுதற்கரியவெண்மரிலக்க, ருள்ளபேர்களுமொராயிரபூத
வெள்ளமும்புடையின்மேவரநீபோய்ப், பொள்ளெனப்புரிசையின்புடைசூழ்தி. ()

சென்றுமுன்கடைசிதைத்தனையங்ஙன், கன்றிநேரவுணர்காவலன்மைந்தன்
றன்றுசேனைகடொலைத்தமராற்றி, வென்றிகொண்டவனைமீளுதியென்றான்.(௭0)

ஈரும்வேன்முருகனிவ்வகைகூறி, வீரவாகுவைவிடுத்திளையோரைச்
சாரதத்தலைவர்தம்முடனேவி, நாரதற்கிதுநவின்றருள்செய்வான். (௭க)

கேட்டியான்முனிவகேழ்கிளர்சிம்புட், கூட்டமீதுசிலகோளரிமேவின்
வாட்டவல்லனகொன்மாய்குவதல்லாற், காட்டுவொமுடிவுகாண்டியதென்றான். ()

குமரனல்குவிடைகொண்டுபெடர்ந்தே, விமலவாளுணர்வின்மேதகுவீரன்
சிமையமேருநிகர்திண்சிலையொன்றை, யமரர்கோன்புகழவங்கைபிடித்தான். (௭௩)

வீக்கினன்கவசம்வெந்நிடைதன்னிற், றூக்கினன்பகழிபெய்திடுதூணி
நீக்கமில்விரலினீடுகைதன்னிற், றொக்குகோதையொடுபுட்டிறரித்தான். (௭௪)

சேமவெம்படைசெறிந்திடுவைய, மாமருங்கினில்வரம்பிலசெல்லத்
தோமில்வீரமிகுதோளினனங்கோ, ரேமமாமிரதமேறினன்மாதோ. (௭௫)

எட்டுவீரருமிலக்கருமேனை, மட்டில்பூதகணமன்னருமாக [கார்.
வொட்டியாடமருருக்கொடுகொண்மூ, முட்டுதேர்த்தொகையின்மொய்ம்பொடுபுக்

தேரின்மேற்படுசிறப்புடைவீரர், வீரவாகுவைவிரைந்தயல்சூழ்ந்தார்
கேரிலாயிரநெடுங்கதிரொன்றைச், சூரர்தந்தொகுதிசுற்றியவாபோல். (௭௭)

விரசியேயமர்விளைத்திடவெஞ்சு, ரரசன்மாநகரினுயிரவெள்ளம்
புரிசனங்கள்படர்மின்கடிதென்னு,முரசறைந்தனர்களாயிடைமொய்ம்போர்.(௭அ)

அறைந்தகாலைதனிலாயிரவெள்ள, நிறைந்தபூதர்களெவேன்முருகன்பாற்
செறிந்துபோற்றிடவேனையர்சென்று, குறைந்தவார்கலியுடைந்ததுபோல. (எக)

அருத்தியிற்படருமாயிரவெள்ளக், கிருத்திமத்தவர்களெர்ந்திடுதீப்போ
லுருத்துவேலையிலொலித்துயருழி, மருத்தின்வன்மைகொடுவேந்திடுகின்றார். (அ0)

பையராவிறைபரித்திடுகின்ற, வையம்யாவையுமொர்வாகுவின்வைக்குங்
கையர்காலனையடுர்ந்தறுகண்ணர், வெய்யரானவர்கள்யாரினும்வெய்யோர். (அக)

அரத்தவேணியரடும்படையேந்துங், கரத்தர்வெங்கழல்கலித்திடுதாளர்
வரத்தின்மேதகையர்மாயைகடந்தோ, ருரத்தினண்டமுமுடைத்திடவல்லோர். ()

இனையதன்மையினிலீண்டியபூத, ரனைவருஞ்செலவவர்க்கிறையானோர்
தனதுதொல்லினைஞர்தம்மொடுசென்றான், வனைகருங்கழல்வயம்புனைவாகு. (அக)

செல்லலுந்திமிலைசெல்லுறழ்பேரி, கல்லெலனுங்கரடிகாகளமாம்பல்
சல்லரிப்பறைதடாரியுடுக்கை, பல்லியம்பிறமுழங்கினபாங்கர். (அச)

மாறில்சேனையிடைவந்தெழுபூழி, நீறுபூசிமுடிநீடியகங்கை
யாறுதோய்ந்தகல்விசும்பிடையாடி, யேறுகொண்டகொடியீசனையொப்ப. (அரு)

பாயசாரதர்படைக்குளெழுந்தே, யாயபூழியவுணப்படைதன்னிற்
சேயபூழியொடுசேர்வனதாமுன், போயெதிர்ந்தமர்புரிந்திடுமாபோல். (அசு)

பான்மையின்னனபடைப்புறவெண்ணில், சேனைவெள்ளமொடுதிண்டிறல்வாகு
தூநலந்தவறுசூருறைமூதூர், வானுலாம்புரிசைமாடுறவந்தான். (அஎ)

வே று.

ஆனதொர்காலையினதனைநோக்குறீஇத், தானவரொருசிலர்தரிப்பின்றோடியே [ர்.
சேனையங்கடலினைத்தீர்ந்துவல்லைபோய்ப்,பானுவின்பகைஞனைப்பணிந்துகூறுவா

மாயிருந்தானைகண்மருங்குசூழ்ந்திட, நீயமர்செயவருநிலைமைநாடியே
வேயெனமுந்திவண்மேயினான்றனை, யேயினன்குமரவேணிகழ்ச்சியீதென்றார். ()

மற்றிவையவுணர்கோன்மதலைகேட்டலுங், கற்றையங்கதிர்மணிக்கடகக்கை
யினை, யெற்றினன்முறுவல்செய்தெயிறுதீயுகச், செற்றமொடுயிர்த்திவைசெப்பன்
மேயினான். (கூ0)

இருந்திடுபாலனையென்னொடேபொர, விரைந்தெதிர்தூதனைவியன்பதாதியாய்ப்
பொருந்தியபூதரைப்போர்க்களத்தியான், றுரந்திடுகின்றனனென்றுலைந்துபோகவே.

அந்தரவரைப்பினிலாசையெட்டினில், வந்திடுமெளக்கரின்மற்றைநேமியிற்
கந்தனுமொற்றனுங்கணங்கள்யாவருஞ், சிந்தினர்வெருவியேதிரியக்காண்பனால். ()

புன்மையராகியபூதர்சேனையும், வன்மையிறாதனுமழலைப்பிள்ளையுந்
தொன்மிடலொருவியேதொலைந்துபோகினு, மென்மனவெகுளியுமேகற்பாலதோ.

விடுகிலனவர்தமைமேலையேழ்பெருங், கடறிசைமுழுவதுங்கடந்துசெல்லினும்
புடையதுசுற்றியேபோக்குறாதிவட், கொடுவருகின்றனன்குறுகிப்பற்றியே. (கூச)

மேவலிலவர்தமைமேலைசம்பெருங், காவலன்முன்புறக்காட்டியிவ்விடைத்
தேவர்கடம்மொடுஞ்சிறையில்வீட்டுவே, னேவருமெனதுசீரிறைஞ்சியேத்தவே. ()

என்றிவைபற்பலவிசைத்துச்சூர்மகன், கன்றியமனத்தொடுகடிதுசேறலுந்
துன்றியவவுணர்தந்தொறுமுன்போயின, பொன்றிகழ்வடமதிற்புதவுநீங்கியே. ()

ஆனதோர்காலையினடையும்பூதவெஞ், சேனையிறுற்றநுந்திறனுங்கண்ணுறீஇத் தானவர்கூறுவார்சமர்கண்டோடிய, வானவரன்றிவர்வலியர்போலுமால். (௬௭)

என்னினுமிங்கிவரெம்மொடேபொரும், வன்மையுமுடையரோவரம்பில்குன்றெலாம், பொன்மலையதனொடுபொருவதேயினு,மின்மினிகதிரினும்விளங்கவல்லதோ.

என்றிவைபோல்வனவிணையிறுனவ,ரொன்றலபலபலவுரைத்துவெஞ்சினங், கன்றியவழல்விழிக்கணத்தின்சேனைநேர், சென்றனர்தெழித்தனர்சிலைத்தபல்லியம். ()

வயிர்த்திடுபூதர்கண்மறலியென்றுல, கயிர்த்திடுமவுணரைநோக்கியம்புவி, யுயிர்த்தொகையலைத்தவருவர்கொலோவெனச், செயிர்த்தனரிடித்தனர்தீயின்வெம்மையார். (௪௦௦)

கரையறுதானவர்தாமுங்காய்கனல், புரைதருசூர்விழிப்பூதவீரரு மொருவரினொருவர்போருடன்றுசேறலா, னிருவகையனிகமுமிகலினேற்றவே. ()

தந்தியின்கரங்களிற்றண்டமீந்திடா, வந்தெதிர்தெம்முனைமாய்ந்துவீடுறச் சிந்துதியெனுங்குறிசெப்பிப்பூதர்மே, லுந்தினர்மீமிசையுலப்பிறுனவர். (௪௦௨)

பகைத்திடுபூதர்கள்பலருநாடியே, திகைத்திலவையாவெனச்சிந்தித்தையுறத் தகைத்தடந்தாளவைதரையின்பாற்படா, துகைத்தனர்பரியெனுமோதவேலையே. ()

காரிடைச்சென்றெனக்களிற்றினுந்திரை, நீரிடைச்சென்றெனநிமோவினும்,போரிடைச்சென்றனர்புறத்துப்போற்றியே, தேரிடைச்சென்றனர்வரையிற்சென்றென.

அடுகரிநிரையினையாடன்மாக்களைத், தடநெடுந்தேர்களைத்தணப்பிலாவகை கடலினைவளைந்திடுகரையதாமெனப், புடைதனிற்சுற்றியேபுவியினேகினர். (௪௦௫)

அத்திறமெதிர்ந்திடுமவுணர்பூதர்மேன், முத்தலைவேற்படைமுசுண்டிதோமரஞ் சத்தியொடெழுமழுத்தண்டமேமுத, லெத்திறப்படைகளுமெடுத்துவீசினர். (௪௦௬)

கரங்கொடுபெரும்படைக்கலங்கள்யாவையும், பரங்கொடுவீசியபதகருட்கிட மரங்கொடுமெழுக்கொடும்வரைகொடுந்தம, துரங்கொடும்வீசினருலைவில்பூதரே. ()

வேறு.

செறிந்துநேர்ந்துசெருச்செயுமெல்லையி, னிறந்ததானவரெண்ணிலராவிபோய்த் தறிந்ததாளுந்தலையுங்கழலுமாய், மறிந்தசாரதருஞ்வரம்பில்லையால். (௪௦௮)

மாண்டசாரதர்யாக்கையுமண்மிசை, வீண்டதானவர்மெய்களுஞ்செங்களம் யாண்டுமாகியிருங்கரைபோலுற, நீண்டநேமியினின்றதுசோரிநீர். (௪௦௯)

விரவுபூதர்வெகுண்டுசென்றென்னல, ரிரதமோடிரதங்களையெற்றினர் கரிகளாற்கரியின்றொகைகாதினர், பரிகளொடுபரிகளைமோதினர். (௪௧௦)

ஆளையாள்கொண்டடர்த்தனராங்கவர், தோளையேதமதோள்கொடுதாக்கினர் தாளினலவர்தந்தலைசிந்தினர், கோளரித்தொகைமானடுங்கொள்கையார். (௪௧௧)

ஏற்றசாரதரெற்றிடத்தானவ, ரூற்றமின்றியுடைதலுமவ்வழிக் காற்றொடங்கிகலந்தன்னகாட்சியா, னுற்றலானன்னவிகண்டானரோ. (௪௧௨)

கையின்மேயினகார்முகமொன்றுதன், மொய்யின்வாங்கிமுரண்கெழுநாணொலி செய்யலோடுமெத்தேவர்வெருக்கொளா, வையகோவென்றலக்கணுற்றுரரோ. ()

காரியார்ப்புகணுகளுநாற்படை, மூரியார்ப்புமுகிலிடையார்ப்பெனும் பேரியார்ப்பும்பிறங்குபெருங்கடல், வாரியார்ப்புந்தம்வாய்மடிந்திட்டவே. (௪௧௪)

கொற்றவில்லிற்றொடுங்கனல்வெங்கணை, முற்றுமாரியின்முத்திறந்தூண்டலுஞ்
செற்றுபூதர்தமொய்ம்பினுட்சென்றன, புற்றினூடுபுகுந்திடுபோந்தள்போல். (௧௧௫)

அங்கிமாப்படையேவலுமவ்வழிச், சிங்கனென்னுந்திறல்கெழுசாரத
னெங்கணுய்தியிறந்தனையீண்டெனாப், பொங்குசீற்றம்புகுந்தனன்புந்திமேல். ()

நேர்கொண்டார்த்துநெடுந்தகைதீயவன், றேர்கொண்டார்க்குந்திறற்பரிச்சேக்
கையிற், பார்கொண்டார்ப்பப்பருஉத்தடக்கைதனிற், ரூர்கொண்டார்த்திடுந்தண்டி
னிற்சாடினன். (௧௧௭)

சாடுமெல்லையிற்சாரதியுந்திய, வாடல்வாம்பரியாவியுலந்திட
வோடலின்றியிரதமங்குற்றதா, னீடுநின்றநிலைப்படுதேரென. (௧௧௮)

மாக்களுற்றமடிவினைநோக்கியே, தீக்கனற்பெயரோன்சினமேற்கொளாத்
தாக்கணங்குறுதாழ்சிலைவாங்கியே, யேக்கள்பூட்டியிதுவொன்றுகூறுவான். (௧௧௯)

தடுக்கொணாவிச்சரஞ்சொரிந்துன்னுயிர், படுத்துவானவர்பார்த்திடத்தென்றிசை
விடுக்கிலேனெனின்வெஞ்சமரத்திடை, யெடுக்கிலேன்சிலையானெனக்கூறினன்.

சூளிவ்வாறுபுகன்றுதொலைவிலா, வாளியான்மிசையங்கியின்பேரினன்
கோளியார்பயனுமெனக்கூற்றுறழ், வாளிதூண்டிமறைத்தனன்மேனியே. (௧௨௧)

மறையவேயுடல்வாளிகடேண்டவு, மிறையுமுன்னலனின்னலுற்றுழ்கிலன்
பொறையினேடுபொருக்கெனப்போகியத், தறையினின்றசயந்தனத்தேறினன். ()

நீர்முகந்தநெடுமுகிலாமெனத், தேர்முகந்தனிற்றீயவனேந்திய
கார்முகந்தனைக்கைக்கொடுவாங்கியே, பார்முகத்துப்பதைப்புறவீசலும். (௧௨௩)

வலக்கையாலொருவான்கதைபற்றியே, சிலைக்கையீர்த்திடுஞ்சிங்கனைத்தீயினன்
றலைக்கண்மோதலுந்தானவரார்த்தனர், கலக்கமுற்றனர்கண்டவத்தேவரே. (௧௨௪)

அடித்ததண்டொடடனலிதன்கைத்தலம், பிடித்துமற்றொர்பெருங்கையினாலவன்
றடித்தமார்பத்தடவரைசாய்ந்துக, விடிப்பின்மும்மையிசைத்திடவெற்றினன். ()

எற்றவெய்யவனெல்லையிறுன்புறச், செற்றமிக்கெழுஞ்சிங்கனுஞ்செங்கையிற்
பற்றுதண்டத்தொடுமப்பதகனைச், சுற்றிவானந்துணுக்குறவார்த்தனன். (௧௨௬)

மாறிலாதவவுணனைவன்கையாற், சூறைபோலவச்சிங்கன்சுலவலு
மீறில்பித்தினிலேமருவோன்மிகத், தேறலார்ந்தெனத்தேற்றமின்றாயினன். ()

ஆரழற்பெயரண்ணலறிவொரீஇச், சோருமெல்லையிற்றுண்ணெனவேறிய
தேரைவிட்டுத்திறலரிப்பேரினன், பாரினெற்றப்பதைப்பொடுதுஞ்சினன். (௧௨௮)

வேறு.

அண்டருந்திறலின்மிக்கவனலியங்கிறந்தவண்ணங்
கண்டனன்கவலாவுள்ளமழுலெனக்கறங்குகண்ணான்
சண்டனென்றுரைக்கும்பேரோன்றடுப்பரும்படைகடன்கை
கொண்டிவனுயிரையின்னேகுடிப்பனாலென்றுசென்றான். (௧௨௯)

என்றதோர்மாற்றங்கேளாவெரிவிழித்திடியினக்குப்
பொன்றியவனலியங்கைப்போர்கெழுதண்டம்வாங்கிச்
சென்றனன்விரைவிலன்னான்றேர்மிசைப்பாய்ந்துநீலக்
குன்றெனும்வயிரத்தோண்மேற்புடைத்தனன்கூற்றமுட்க. (௧௩௦)

புடைத்தலுமுயிர்த்துநெஞ்சம்பொம்மெனப்பொருமலைத்தித்
தடப்பெருந்தேரில்வீழுஞ்சண்டனுந்தனதுசெங்கை
யெடுத்ததோர்தண்டந்தன்னாலெதிர்புகுஞ்சிங்கன்மார்பத்
தடித்தனனவனுந்தானுமாரஞருழந்துவீழ்ந்தார். (௧௩௧)

அப்பொழுததனைநோக்கியவுணரின்மாயனென்போன்
குப்புறுதடந்தேரோடுங்குறுகலும்பூதர்தம்மி
னொப்பிலாநீலனேர்போயோச்சினன்கதையொன்றண்ணன்
முப்புரமதனிற்றூண்டுமெரிவான்பகழியென்ன. (௧௩௨)

போந்ததோர்தண்டமாயன்பொருவகன்மார்பிற்றாக்க
மாய்ந்தனன்போலநின்றுவருந்திமற்றவன்றன்பாணி
யேந்துமுத்தலைவேலொன்றையெறிந்தனனெழிலாகத்திற்
சாய்ந்ததுகுருதிநீலன்றானுமங்கயராநின்றான். (௧௩௩)

சிறிதுபோழ்ததனிற்றேறித்திரண்மணிக்கடகஞ்சேர்த்த
வெறுழ்வலித்தடக்கைதன்னாலெதிர்ந்தவனுரத்தினெற்ற
வறைகழன்மாயன்றானுமணங்குறநீலனென்போன்
கறைகெழுநாகமென்னக்கனன்றிதுகருதிச்செய்வான். (௧௩௪)

மந்தரந்தழீஇயதொல்லைவாசுகியென்னமாயன்
சுந்தரத்தடம்பொற்றோளைத்துணைக்கையாற்றொடர்ந்துவீக்கிக்
கந்தரந்தன்னிற்றீயகறைசெறியெயிற்றிற்கவ்வி
மூந்துறுகுருதிச்செந்நீர்குடித்தனன்மொய்ம்பினோடும். (௧௩௫)

சோரியதுண்டுநீலன்றொல்சினந்துறந்துநின்றா
னாருயிருண்டுபோனானந்தகனனையகாலை
மூரிவிற்றடக்கைமாயன்முடிந்தனன்சண்டன்சிங்கன்
பேரஞருழந்தோர்தேறிப்பின்னும்போர்புரியலுற்றார். (௧௩௬)

கிட்டினர்தடந்தேர்மீதுகிடந்ததண்டேந்திக்கீழ்போ
யொட்டினரொருவர்தம்மினொருவர்மேலுடன்றுபொங்கி
முட்டினரிரண்டுபோலின்முறைமுறைபெயர்ந்தார்மொய்ம்பால்
வட்டணைதிரிந்துதண்டிற்றாக்கினார்மாற்றுகின்றார். (௧௩௭)

இங்கிதுபோலப்பல்வேறியற்கையிற்கதையின்வெம்போர்
சிங்கனுஞ்சண்டன்றானுஞ்செய்தனர்திரிந்தவேலைப்
பொங்கியபூதர்வேந்தன்பொருவருமவுணன்பொன்னா
ரங்கையிற்றண்டஞ்சிந்தவடித்தனனணிப்பொற்றண்டால். (௧௩௮)

வயிர்த்திடுதண்டமங்கண்வலிகெழுசிங்கன்மோத
வயிர்த்தொகையாதலோடுமாற்றல்சேரவுணர்யாரு
முயிர்த்தனரென்கொலாமென்றுன்னினருருமேறென்னச்
செயிர்த்தனன்சண்டனென்னுஞ்செருவலானுரைக்கலுற்றான். (௧௩௯)

தண்டமொன்றிற்றதென்றுதருக்கலைதடம்பொற்றோளாக்
கொண்டதுமஃதேயன்றோகூற்றுவனகருமேலை
யண்டமுமுலையத்தொன்னாளடர்த்தனனுணக்கிங்கஞ்சேன்
மண்டமர்புரிதியென்னாவலிகெழுகரங்கொண்டேற்றான். (௧௪௦)

எற்றனனிகலும்வேலையெரிசினங்கடவிச்சிங்க
னாற்றலையாங்கொணீயென்றாற்றலையணிபொற்றண்டம்
போற்றுகென்றுய்ப்பவங்கட்புகாநெறிபுடைத்துக்கையாற்
கூற்றனுமுட்கவார்த்தான்குருமணித்திரடோள்கொட்டி. (கசக)

அந்நெடுந்தகையோனார்ப்பவதுபொருதழன்றுசிங்கன்
பொன்னெடுந்தண்டாலன்னான்புயமிறப்புடைத்தலோடுங்
கன்னெடுந்தோளுமோர்சார்கதுமெனமுரியத்தண்டும்
பன்னெடுந்துணியாய்ச்சிந்திப்படிமிசைக்கிடந்ததன்றே. (கசஉ)

புயந்தளர்ந்திடலுஞ்சண்டன்போவதுகரமென்றன்னா
வயர்ந்திலனாசிபொற்றோளையங்கையினிறுத்துவாங்கி
வயங்கெழுதண்டிற்பற்றிவட்டணைபுரிந்தான்வானோர்
வியந்தனரிவனேகொல்லாம்வீரருள்வீரனென்றே. (கசங)

கரங்கெழுபுயப்பொற்றண்டாற்கார்கெழுசண்டன்காம
ருரங்கெழுவுரத்தின்மோதவுருகெழுமடங்கற்பேரோ
னிரங்கிலனுவன்போல்யானுமெற்றலன்கரங்கொண்டென்னாச்
சரண்கொடேயவன்றனாகத்தடவரையதனைச்சாய்த்தான். (கசச)

கண்டகன்சாய்தலோடுங்கரமெடுத்தார்த்துவானோர்
புண்டருங்குருதிச்செங்கட்பூதநாயகநீயன்றேற்
சண்டனைப்புதைப்பார்யாரேதாழ்த்திடலவன்றனாவி
கொண்டருளிறையினென்றுகுறையிரந்தறையலுற்றார். (கசரு)

வேறு.

வானவருரைகேளாமறலியொடிகல்வெங்கட்
டானவனிவனேயென்றனியுயிரடுகிற்பா
னீனமதுறுதேவரிவனொடுநுமையின்றே
யூனுடலுயிரோடுமுண்குவனதுகாணீர். (கசசா)

என்னலுமிகல்சிங்கனெரிகலுழ்விழியானென்
முன்னிதுபுகல்கின்றாய்முடிகுவையினியென்னாக்
கொன்னவிறருகையாற்கொடிறுடைதரமோத
வொன்னலனதுபோழ்தினொவிமுகிலெனவீழ்ந்தான். (கசஎ)

போழுறுபகுவாயிற்பொலிதருமெயிறோடும்
வீழுறுநகையாலும்விரிகுருதியினாலுந்
தாழுறுமதிதன்னைத்தாரகைநிரைசூழ
வூழுறவமர்செவ்வானொத்ததவ்வுழியன்றே. (கசஅ)

சண்டனுமிறலோடுஞ்சமன்விடவருதூத
ரண்டலர்வெருவாமுனலமரலுறுகின்றார்
கண்டனனதுசிங்கன்கையனதுயிர்தன்னைக்
கொண்டணைகுதிரென்னக்குறுகினரதுகொண்டார். (கசகூ)

ஆனதொர்செயல்பாராவசமுகனெனவோது
மானவனிறைநின்னில்வந்தனதுயிருண்ப
லேனையரெனவேநீயெண்ணலையெனையென்னாக்
கானிமிர்தருதேர்மேற்கடுவிசையொடுசென்றான். (கரு௦)

சிங்கனெதிர்செல்லுஞ்செல்லுறழ்பகுவாயா
னங்கணுகிடும்வேலையதிபலமதுவென்போ
னெங்கினியகல்வாய்நீயிற்றனையிவனென்றுப்
பொங்கியசினமோடும்பொள்ளெனவிடைபுக்கான். (கருக)

செந்தழல்புரைவெங்கட்டிறலசமுகனென்போன்
முந்துறமதுவென்னுமொய்ம்பினனெதிர்கோட
லந்தகனொடுகாலனமர்புரிதரவேமுன்
வந்தெதிரெதிர்தன்மைமானுவதெனலாமால். (கருஉ)

அணுகினரிருவோருமசமுகனதுகாலைக்
குணநனிசிலைகொள்ளக்குலவியசிலைகொள்ளாக்
கணிகையர்மிளிர்வேற்கட்கடைநிலவியதென்ன
நுணுகியநுதிவெங்கணோன்கணைசிதறுற்றான். (கருங)

முன்னதுவரலோடுமுகனுறுசெயலோரான்
றுன்னுபுசெறிபோழ்துந்துணைவிழியிமையாதான்
றன்னிலையிறையேனுந்தவிர்கிலனொருதானே
யந்நிலைதனினின்றானடுதிறன்முயல்கின்றான். (கருச)

பானுறநிமிர்கின்றபழுமரமதுபற்று
மேனுறுசரம்வீசான்விடுகணைபடமெய்யிற்
சாலிகையெனநின்றான்றகுவனதிரதத்திற்
காலெனவிசைசென்றேகருமுகிலெனவார்த்தான். (கருரு)

ஆர்த்தனனதுகேளாவசமுகனயர்வெய்தித்
தேர்த்தனிநிலமீதிற்சிலையொடுகணைசிந்தி
வேர்த்தனன்வறிதுற்றான்விம்மினன்மெலிதன்மை
பார்த்தனன்மதுவென்போனிவையிவைபகர்கின்றான். (கருசு)

வீரனுமலையெஞ்சாவெஞ்சமர்வலனெய்தச்
சூரனுமலைநின்றேசூர்நிலையதுகாணுந்
தீரனுமலையென்னேசெருமுயலுதிநீநின்
னாருயிர்கொடுபோகென்றவனியின்மிசைபோனான். (கருஎ)

பாரிடனிலன்மேவப்பகரசமுகனென்னும்
பேருடையவன்வெள்கிப்பெருமிதமிலனாகிப்
போரிடைவெருவுற்றேனெனவொருபுரையுற்றே
னாரிடையிதுதீர்வனெனவலமருகின்றான். (கருஅ)

ஆயிடையவுணன்றானமர்புரிகிலனாகிப்
போயினனவனந்தோபொன்றுதலினிதென்னாக்
காயமொடுளமானக்கனல்சுடமனம்வேவத்
தீயெனவெகுளுற்றான்செருமுயறிறல்பெற்றான். (கருகூ)

ஒல்லையினவனேகியுழிதனிதொடராகிற்
கொல்லுவனினியாண்டுக்குறுகினுமகலாதே
நில்லுநில்லெனவாராநீனிறமுகிலென்னச்
செல்லுறழ்பகுவாயாற்றிசைசெவிடுறவார்த்தான். (கசு௦)

அற்றமின்மதுவென்போனசமுகனுரைகேளாக்
கற்றதுமுளகொல்லோகழறினைசிலவீரம்
பெற்றிலையெனைநாடிப்பெயருதல்பிழையேனு
முற்றனையிசையெற்கோருறுபழிதருகின்றாய். (௧௬௧)

என்றிதுபுகல்கின்றேனெதிருறவிகலிப்போய்ப்
பொன்றிகழ்சிலைகோலிப்பொறியுமிழ்பிறைவாளி
யொன்றலபலவுய்ப்பவுருகெழுசினமெய்தி
நின்றனனவையாவுநெடியகைகொடுவீசி. (௧௬௨)

வேறு.

வைத்தலைப்பகழிமேல்விடுப்பமாமது, வெய்த்திலனிறையுமென்றெண்ணியெண்ணலன், முத்தலைக்கழுவயின்முசலமாதியாங், கைத்தலப்படையெலாஞ்சிதறுங்காலையே. (௧௬௩)

சாரதன்மெய்யுறத்தளர்ந்துதானவன், றேரினைவிரைந்துதன்செங்கையாலெடா
வாரிதிமேற்செலவிடுப்பவஞ்சகன், பாரிடையொல்லையிற்பாய்ந்துமேயினான். ()

குப்புறுகின்றவன்கூளிவேந்தன்முன், வெப்பமொடணுகுறவீங்குதோளினாற்
றுப்புறுமற்றொழிறொடங்கவானகத்,தப்புறமவன்செலவடிகொண்டோச்சினான். ()

வெய்தெனவிறந்துவான்மீண்டுபூதன்மு, னெய்தினனவனுரத்திடியினெற்றியே
வைதனன்போயினன்மறைந்துமற்றொரு, கைதவநினைந்தனன்ககனம்புக்குளான்.

வரந்தனிற்பெற்றதோர்மாயநேமியைக், கரந்தனிலெடுத்தனன்கருத்திலர்ச்சனை, புரிந்தனன்றொழுதனன்போற்றிப்பூதன்மேல், விரைந்துறவிடுத்தனன்விளியுந்தன்மையான். (௧௬௭)

மாசறுமசமுகன்மதுவினுகமேற், பாசனம்வியப்பமால்பரிதியுய்த்தலுங்
காசினியவன்வெறுங்கரத்தனாதலின், வீசியவப்படைவெகுண்டுமீண்டதே. ()

கனையிருளுருவினைக்கனலிசேர்ந்தென, முனைகெழுமசமுகன்முடியையட்டதாற்
றனதுகைநேமிதன்னுலுறுததோர், வினையிலையென்பதுமெய்ம்மைபோலுமால். ()

உலந்தனனசமுகனுருமுவீழ்ந்தென, நிலந்தனில்வீழ்தலுநின்றதானவர்
புலந்தனராழிமால்புடையிற்போயது, தொலைந்ததின்றமரெனுவமரர்துள்ளவே. ()

சாற்றியவவுணர்தந்தலைவரேனையர், நாற்றிறப்படையொடுநடந்துதம்முளஞ்
சீற்றமதாகியேசெருவிளைத்தலு, மேற்றெதிர்சாரதரிரிந்துபோயினார். (௧௭௧)

வெற்றிகொடானவர்வெகுண்டுபோர்செயப், பற்றலராகியபாரிடத்தவ
ரிற்றனர்வன்மையையிரிந்துபோயினார், மற்றதுகண்டனன்வலியதண்டகன். ()

வேறு.

ஏற்றமாகுமிலக்கவில்வீரருட், சாற்றுபேரிசைத்தண்டகப்பேரினான்
கூற்றைநேர்வதொருசிலைகோட்டியே, மாற்றலார்மிசைவாளிகவேவினான். (௧௭௩)

மின்னுநாரிவியன்சிலையேசிலை, துன்னுநாணொலிகூருருமேற்றொலி [லே.
பொன்னின்வாளிமழைபொழிந்திட்டதான், மன்னுதண்டகமாப்பெருங்கொண்ட

தட்டின்மொய்ம்புடைத்தண்டகமேலையோன், விட்டவாளிகள்வெய்யவர்தானையுட், பட்டகாலைப்பரந்தெழுசோரிநீர், மட்டிலாதகுடிரையின்வந்ததே. (௧௭௫)

இரதமிற்றனவெண்ணிலவண்ணமார், பரிகள்பட்டனபற்பலமாமதக்
கரிகள்பட்டகணிப்பிலவெண்ணிலா, வரிகணேரவுணப்படைபட்டதே. (௧௭௬)

இந்தவாறிவர்பட்டிடவேனையோர், நொந்துதம்முயிர்காப்பதுதலியே
சிந்தியேயெண்டிசையினும்பாரினு, மந்தரத்தினுமாயிரிந்தோடினார். (௧௭௭)

வேறு.

தண்டாவவுணப்படையிவ்வகைசாய்ந்தவாறு
மெண்டானைமள்ளர்பலரங்கணிறந்தவாறும்
விண்டாழ்கதிரைச்சிறைபூட்டியவீரவீரன்
கண்டான்வெகுண்டானகைத்தொன்றுகழறுகின்றான். (௧௭௮)

மட்டார்தெரியன்மகவான்முதல்வானுளோர்க
ளெட்டாதசேணிற்றலைவெய்தியிரிந்துபோக
வட்டாடல்செய்தநமரங்களின்றாவிமாண்டு
பட்டார்கொலீசன்மகனேவுபடைகடம்மால். (௧௭௯)

எல்லார்கதிரைச்சிறைபூட்டியயானுநிற்க
வொல்லார்களாற்றலுளராயபெரும்பதன்றாற்
கொல்லாதுசீற்றமிலதாயிகல்கொண்டுதேல்
வெல்லாதுகொல்லோவரிதன்னையும்வேழமெல்லாம். (௧௮௦)

வாரார்கழற்காலமராரடமாய்ந்தவெள்ள
மீராயிரத்தின்மிகுமல்லதையெஞ்சுறாதாற்
பேராமலென்பாங்கரினிற்பனபேசில்வெள்ள
மோராயிரமேயிரிகின்றதொழிந்ததெல்லாம். (௧௮௧)

ஒன்றேவரிவிலொருவேன்பிடித்தொன்னலார்மேற்
சென்றேயடல்செய்திலன்முன்னமென்சேனையெல்லாங்
கொன்றேனியானேபொரவிட்டனன்கூழைதன்னி
னின்றேனிஃதோர்பொருளென்றுநினைந்திலேனால். (௧௮௨)

தீருஞ்செயலேநினைந்தாவதென்சென்றியானே
யோரொன்றுகன்னன்முடிகின்றமுன்னொன்னலார்தம்
பேரின்றெனவேயடுவேனதுபெற்றிலேனேற்
சூரன்குமரனலன்யானெனச்சூண்மொழிந்தான். (௧௮௩)

பானுப்பகைவனிவைகூறிப்பரிதிமான்றேர்
மானக்கடுங்கோல்வலவன்மரபிற்கடாவச்
சேனைக்கடலினுடன்சென்றுதன்செங்கைதன்னிற்
கூனற்சிலையைப்புருவத்தினொடுங்குனித்தான். (௧௮௪)

மேதக்கதன்கைச்சிலைவாங்கிவிளங்கும்வெள்ளி
சோதிக்கிறையாயுறுமெல்லையிற் * சூல்கொண்மேக
மூதக்கபாரிற்சொரிந்தென்னமுனிந்துநேரும்
பூதப்படைமேற்சரமாரிபொழிதலுற்றான். (௧௮௫)

பொழிகின்றகாலைத்திறன்மேதகுபூதர்நோக்கிக்
குழிகின்றகண்ணினழல்காலக்குலாசலங்க
ளொழிகின்றவெற்புமுழுதும்பறித்தொல்லைவீசி
யழிகின்றகாலத்துருமேறெனவார்த்துநின்றார். (௧௮௬)

* விளங்கும்வெள்ளிசோதிக்கிறையாயுறுமெல்லையில் என்பதற்கு - அத்தமயனமின்றிச் சூரியனுக்குமுன்னே உதயஞ்செய்யும் வெள்ளி சோதியிலே ஆட்சியாக வருங்காலத்தில் எனப்பொருள்கொள்க.

என்றின்பலகைஞன்றனைப்பூதர்கள்யாரும்வீசுங்
குன்றம்பலவும்புடைசுற்றக்குறித்துநோக்கி
யொன்றங்கதனுக்கொருகோடியொண்கோலதாகத்
துன்றும்படியேழுறைதூண்டித்துகள்செய்திட்டான். (௧௮௭)

வண்டூதுந்தாரவன்வாளியின்மாய்ந்தகுன்ற
நுண்டூளியாகியதுவானிடைநொய்தினேகி
விண்டோர்கடோறுஞ்செறிகின்றவர்மேனிதோயக்
கண்டூதியாற்றுதவர்விண்ணிடைக்கங்கைபுக்கார். (௧௮௮)

தேவுத்தடந்தேரொருவன்செருவெல்லைமுற்று
மேவிக்கறங்கிற்றிரிவான்றனிவில்லைவாங்கிக்
கோவைத்தொடையொன்றினிலாயிரகோடிவாளி
தூவிக்கணத்தின்றொகைமுற்றுந்தொலைவுசெய்தான். (௧௮௯)

நன்காலநீவிமிளிர்கின்றநறுநெய்தோய்ந்த
மின்காலதனின்விரைகின்றசெந்தீயின்வெய்ய
முன்காலுகின்றசுடருள்ளனமூன்றுகண்ண
வன்காலனஞ்சவடவல்லனவஞ்சன்வாளி. (௧௯௦)

தோளைத்துணிக்குங்கரத்தோடுதுணிக்குமார்பைத்
தாளைத்துணிக்குமெரிகுஞ்சித்தலைதுணிக்கும்
வாளைத்துணிக்குமணிமெய்வயப்பூதர்வாழ்க்கை
நாளைத்துணிக்குமசுரன்விடுநாமவெங்கோல். (௧௯௧)

சூரற்கினியமகன்வாளிதுணித்துவீச
வீரத்தின்மிக்ககணத்தின்றலைவீழுமுன்னர்ச்
சீருற்றசோரிப்புனல்சிந்துவதியர்சென்ற
பாரைப்புனிதஞ்செயுந்தன்மைபடைத்ததன்றே. (௧௯௨)

பொன்சென்றிலங்குங்கணைதள்ளலும்பூதர்சென்னி
மின்சென்றவானத்தெழச்சோரியுமீதெழுந்த
வென்சென்றனையாங்குமரன்படையேகலென்னப்
பின்சென்றுபற்றித்தருவான்றொடர்பெற்றிபோலும். (௧௯௩)

எய்யுந்தொழிலுக்கவன்மேலவர்யாவரெங்க
ளையன்படையாகியபூதர்தம்மாற்றன்மொய்ம்புங்
கையும்வரையுஞ்சிரமுங்கழற்காலுமார்பு
மொய்யென்றறுக்குமவுணன்விடுமொன்றோர்வாளி. (௧௯௪)

வானோர்தொகையைச்சிறையிட்டவன்மற்றிவ்வாறு
தானோர்சிலையின்வலியாலடத்தாவில்பூத
ரானோரளப்பில்லவர்மாய்ந்திடவாற்றலில்லா
வேனோர்கள்யாருமுடைவாரிவையெண்ணலுற்றார். (௧௯௫)

மின்னும்புகர்வேலவனங்குளன்வீரவாகு
பின்னின்றனனீதுணரான்பிறராருமற்றே
முன்னின்றநம்மையிவனட்டிடுமொய்ம்பிலேம்யா
மென்னிங்குநிற்பதெனப்பூதரிரிந்துபோனார். (௧௯௬)

இரிகின்றபூதரொவரும்படைக்கீற்றினின்ற
வரிகின்றதண்டாரடன்மொய்ம்புடைவள்ளல்பாங்கர்ப்
பரிகின்றநெஞ்சத்தொடுசெல்லவப்பான்மையர்வுந்
தெரிகின்றனனுக்கிரனென்பதொர்சேனைவேந்தன். (௧௯௭)

கண்டுக்கிரனாகியபூதன்கனன்றுசெங்கண்
விண்டிற்பெரிதுஙிவப்புற்றுவிளங்குபொன்னந்
தண்டப்படையொன்றினையங்கையிற்றாங்கியேகி
யண்டத்தவர்கள்புகழத்தனியார்த்துநேர்ந்தான். (௧௯௮)

செற்றத்துடனுக்கிரனேர்புகுசெய்கைதன்னைக்
கற்றைக்கதிரைத்தனையிட்டவன்கண்டுதன்கைக்
கொற்றச்சிலையைக்குனித்தாயிரகோடிவாளி
முற்றத்துரந்தேயவன்யாக்கையைமூடியார்த்தான். (௧௯௯)

மைக்கின்றமேனிநெடும்பூதனைவஞ்சன்வாளி
தைக்கின்றிலவானுதிமாய்ந்துதளர்ந்துவீழ்ந்த
மெய்க்கின்றவின்புமறனும்விளையாதுவாளா
பொய்க்கின்றவன்கைப்பொருள்வல்லையிற்போவதேபோல். (௨௦௦)

விடுகின்றவாளிபயனின்றயல்வீழ்தலோடும்
படுகின்றதன்மையதுகண்டனன்பானுகோப
னடுகின்றதெவ்வாறிவன்றன்னையென்றங்கண்வானந்
தொடுகின்றதாங்கோரெழுவத்தைச்சுழற்றிவிட்டான். (௨௦௧)

தீயன்முசலந்தனையுக்கிரன்செங்கைதாங்கு
மாய்திண்கதையாற்சிதைத்தேயவன்றேரையண்மிப்
பாயும்பரியைப்புடைத்தொல்லையிற்பாரின்வீட்ட
வேயென்றுபல்காலிகழ்ந்தார்த்தனர்யாரும்வானோர். (௨௦௨)

புரவித்தொகுதிவிளிவாகப்பொருவின்மைந்த
னெரியிற்கனன்றுபுடையோரிரதத்தின்வாவி
வரிவிற்குனித்துக்கிரனேந்தும்வலியதண்ட
முரிவுற்றிடவேயொருநூறுமொட்டம்புதொட்டான். (௨௦௩)

நூறொண்கணையாலவன்றண்டநுண்டூளதாகச்
சீறுந்திறலுக்கிரன்கைக்கொடுதீயன்மைந்த
னேறுந்தடந்தேர்தனைவானினெடுத்துவீச
வீறும்பரிதிபதத்தின்றுணைமேயதன்றே. (௨௦௪)

துன்னான்மதலைவருகின்றதுசூரனோக்கி
முன்னாளினின்றுநகைப்பற்றமுயன்றுளான்கொ
லன்னான்புணர்ப்பையுணரேனணித்தாகுமின்ன
மென்னாவதோவென்றுளத்துன்னியிரிந்துபோனான். (௨௦௫)

தேரோடுசென்றவசுரன்மகன்சேணின்மீண்டு
பாரோடுசேர்வான்வருகின்றபரிசுநோக்கிற்
காரோடுவானந்தவறுற்றுழிக்காமர்தாருத்
தூரோடுசாய்ந்துமறிகின்றதொர்தோற்றமொக்கும். (௨௦௬)

## வேறு.

வீழுகின்றதேரொருவியேவெங்கதிர்ப்பகைஞன்
றாழுமெய்யுடையுக்கிரன்றன்னைவந்தணுகி
மாழையொண்கையாலெற்றியேயெடுத்துவானுலகோ
ரேழையுங்கடந்தப்புறஞ்சென்றிடவெறிந்தான். (௨0௭)

எறியும்வெய்யவன்வேறொருதேரின்மேலேறி
வெறிகொள்பங்கயத்தண்ணலார்விதித்துமுன்னளித்த
செறியுமூவிலையிருதலைவேலினைச்சேண்போய்
மறியுமுக்கிரனெதிர்புகவிடுத்தனன்மன்னோ. (௨0௮)

விடுத்ததெய்வவேலுக்கிரன்மருமத்தைவிடர்போற்
படுத்தியேபுகுந்தப்புறம்போந்திடப்பாரி
னடுத்துமற்றவன்சிறிதயர்வுற்றனனதுகண்
டெடுத்தகுன்றொடுந்தண்டியென்றுரைப்பவனெதிர்ந்தான். (௨0௯)

தண்டியாகியபாரிடன்றனதுகைத்தலத்தின்
மிண்டுகின்றதோரடுக்கலையவன்மிசைவீசக்
கொண்டவார்சிலைவாங்கியாயிரங்கணைகோத்துக்
கண்டதுண்டமதாக்கினனதனையோர்கணத்தில். (௨௧0)

வெற்புநுண்டுகளாதலும்விண்ணுறநிமிர்ந்து
கற்பகம்புரைமராமரமொன்றினைக்களைந்து
வற்புறுங்கரந்தனினெடுத்தவுணர்கோன்மணித்தேர்
முற்புகுந்திடும்பரிகளைப்புடைத்தனன்மொய்ம்பால். (௨௧௧)

மொய்ம்பினிற்புடைத்திடுதலுங்கவனமாமுழுது
மம்புவித்தலைமறிந்தனவதற்குமுன்னவுணன்
பைம்பொன்முத்தலைப்பலபதினாயிரம்பகழி
செம்புனற்கொளத்தண்டிதன்னெற்றியுட்செறித்தான். (௨௧௨)

செறித்த[illegible]லையின்மெலிந்தனன்றண்டியச்செய்கை
குறித்துநோக்கியேபினாகியாம்பூதனோர்குன்றம்
பறித்துவீசுவான்முயறலுமாயிரம்பகழி
நிறத்தின்மூழ்குமாறெய்தனனனையனுநின்றான். (௨௧௩)

குன்றுகொண்டகைப்பினாகியுந்தொல்வலிகுறைந்து
நின்றகாலையிலேனையபூதருநேர்ந்து
சென்றுவீற்றுவீற்றமரினைச்சிலபொழுதியற்றி
யொன்றுதீங்கதிர்ப்பகைஞனுக்காற்றலருடைந்தார். (௨௧௪)

எண்டருங்கணத்தலைவர்கடொலைதலுமிதனைக்
கண்டுவெஞ்சினந்திருகியேயெதிர்ந்தனர்கபாலி
யண்டலோசனனிரஞ்சனனுருத்திரனகண்டன்
றண்டகன்முதலிலக்கமாகியபடைத்தலைவர். (௨௧௫)

மிடல்படைத்திடுமிலக்கமாம்வீரரும்விரவித்
தடமணிப்பெருந்தேரொடுமவுணன்முன்சார்ந்து
சுடருடைக்கடகங்கிளர்செங்கையிற்றன்னுங்
கொடுமரத்தினைக்குனித்தனர்நாணொலிகொண்டார். (௨௧௬)

கவடுபட்டிடுமீரிருமருப்புடைக்கருபக்
குவடுபட்டதையுரைப்பதெனொருகரிக்கொம்பாற்
சுவடுபட்டிடுமேருவுஞ்சலித்ததுதளங்கிச்
செவிடுபட்டனவானமும்வையமுந்திசையும். (உகஎ)

பானுகோபன்மற்றதுகண்டுசிறுநகைபடைத்து
மானவெஞ்சிலையொன்றினைத்தோள்கொடுவணக்கி
மேனலந்திகழண்டங்கள்யாவையும்வெருவத்
தேனின்வீழ்ச்சியைமலைந்திடுங்குணத்தொலிசெய்தான். (உகஅ)

உலத்தின்மேற்படுமொய்ம்புடையிலக்கருமொருங்கே
வலத்தில்வெஞ்சிலையிடத்தினில்வடிக்கணைதொடுத்து
நிலத்தில்வந்துகார்நெடும்புனல்சிதறியநெறிபோற்
புலத்தியன்முறைப்பேரன்மேற்றலைத்தலைபொழிந்தார். (உகக்ஷ)

தொடலை * யம்புயத்திலக்கமாம்பொருநருந்தொடுத்து
விடுசரத்தொகையவுணன்மேல்வீற்றுவீற்றேக
னெடியதெண்டிரைப்பேரியாறெண்ணிலநிரந்து
புடவிகொண்டதோரளக்கர்மேற்போவனபோலும். (உஉ௦)

இலக்கர்விட்டிடுசரமெலாமவுணர்களெவருங்
கலக்கமுற்றிடவருதலுஞ்சூர்மகன்கண்டே
கொலைக்கொடுஞ்சிலைவளைத்ததிலாயிரகோடி
விலக்கருங்கணைதொடுத்தவையறுத்தனன்விரைவில். (உஉக)

அறுத்துமற்றுமோராயிரகோடியம்பதனைச்
செறுத்துவிட்டிடவறுமுகன்பரிசனர்தெரிந்து
விறற்கடுங்கணையாங்கதற்கெழுமையால்விடுத்து
மறித்துமீண்டிடுவித்தனரவுணர்கோன்வாளி. (உஉஉ)

அறந்திறம்பியசூர்மகன்வாளிகளனைத்து
முறிந்துமற்றவன்றன்மிசையுற்றனமுழங்கிச்
செறிந்தமாமுகிலுயிர்த்திடுஞ்சீகரஞ்செல்லா
தெறிந்துகால்பொரவந்துழிமீண்டுபோமியல்போல். (உஉங)

செங்கதிர்ப்பகைசீறியேசெயிரிலாவயிரத்
துங்கவெங்கணையபரித † மிசைமிசைதுரந்து
வெங்கண்வீரர்கள்செலுத்தியசரமெலாம்விலக்கி
யங்கையிற்கொண்டகார்முகமிலக்கமுமறுத்தான். (உஉச)

பிடித்தகார்முகமற்றுழிமானவர்பெயர்த்துந்
தடத்ததேரிடையிருந்திடுஞ்சேமமாந்தனுக்க
ளெடுத்துவாங்கியேசரந்துரந்திரவியம்பகைஞன்
றொடுத்துமேல்விடுங்கணைகளையிடையிடைதுணித்தார். (உஉரு)

சூரன்மாமகன்றொடுசரந்துணித்தபின்றூண்டுந்
தேரிலாயிரம்பரியினூறுயிரந்தெழித்துக்
காருலாவருபதாகையிலாயிரங்கடவி
யூரும்வன்மைசேர்வலவன்மேலாயிரமுய்த்தார். (உஉ௬)

---

* தொடலை - மாலை "தொடலைக்குறுந்தொடி" என்பதனுனுணர்க.
† அபரிதம் - வளைவில்லாதது; எனவே நேர் எனப் பொருள்கொள்க.

வசையில்வீரர்களிவ்வகைவிடுத்தலுமனத்திற்
பசையில்சூர்மகனிரதமும்பரிகளும்பாகு
மசனிகொண்டதோர்துவசமுமற்றனவதற்பின்
விசையில்வேறொருதேரிடைப்பாய்ந்தனன்வெகுண்டு. (உஉஎ)

வையமேற்செலுமவுணர்கோன்றன்சிலைவணக்கிச்
செய்யகூர்ங்கணைநூறுநூறாயிரஞ்செலுத்தி
வையன்விட்டவர்தேரொடுசிலைகளையறுத்து
மெய்யிடந்தொறுமழுத்தினனெண்ணிலாவிசிகம். (உஉஅ)

பரிதிமாற்றலன்பகழிகண்மெய்யெலாம்பட்டுக்
குருதிசோர்தலுமிலக்கருந்தொல்வலிகுறைந்து
பெரிதுநோயுழந்தாற்றலராகியேபின்னர்ப்
பொருதிறந்தனைநினைந்திலருடைந்துபின்போனார். (உஉகூ)

வற்புறுத்தியவிலக்கம்வில்லாளருமலைய
விற்பிடித்தவனொருவனேயாரையும்வென்றான்
முற்பகற்புரிதவப்பயனிஃதெனமொழிமோ
கற்பினாற்றலென்றுரைத்துமோகழறுவதெவையே. (உஙO)

ஆனகாலையில்வீரகோளரியெனவறையு
மானவீரன்மற்றதுகண்டுதனதுவில்வளைத்துப்
பானுகோபன்முன்னெய்தியேபிறைமுகப்பகழி
சோனைமாரியும்விம்மிதமுற்றிடச்சொரிந்தான். (உஙக)

சொரிந்தகாலையிலதுகண்டுசூரன்மாமதலை
சிரந்துளக்கியேயீங்கிவனாற்றலுந்திறலும்
பெருந்தனிச்சிலைவிஞ்சையுநன்றெனப்பேசி
வரிந்தகார்முகங்குனித்தனன்பனித்தனர்வானோர். (உஙஉ)

குனித்தசாபத்தினூறுநூறாயிரகோடி
நுனித்தவச்சிரநொறிலுடைப்பகழிகளூக்கித்
தனித்துநேர்ந்தவன்விடுத்திடுசரமெலாந்தடிந்து
துணித்திடக்கணையாயிரமழுத்தினன்றோண்மேல். (உஙங)

தோளிலாயிரம்வெங்கணையழுத்தலுந்தோலாக்
கோளரித்திறற்பேரினன்கோமகன்றுரந்த
வாளியாவையும்விலக்கியேயாங்கவன்மருமஞ்
சாளரம்படச்செறித்தனனாயிரஞ்சரங்கள். (உஙச)

சரங்களாயிரமகலமேலழுத்தலுந்தருவ
னிரங்கிநோயுழந்தாற்றவுமுனிவுசெய்திவனைக்
கரங்கொள்வில்லினால்வெல்லரிதாமெனக்கருதி
யுரங்கொள்விண்டுவின்படைக்கலந்தனையெடுத்துய்த்தான். (உஙரு)

நாரணன்படையாங்கவனுருக்கொடுநடந்து
வீரகோளரிவிடுத்திடுசரமெலாம்விழுங்கிப்
பாருமண்டமுநடுக்குறவிடிக்குரற்பகுவாய்க்
காரிரிந்திடவார்ப்பொடுகடிதுசென்றதுவே. (உஙசா)

விண்டுவின்படையணுகலும்விறலரியதனைக்
கண்டுமால்படையெடுக்குமுனப்படைகடிதாய்
வண்டுலாந்தொடைமார்பிடம்புகுந்துமன்னுயிரை
யுண்டதில்லையாலவசமாக்கியதவனுணர்வை. (௨௩௭)

அண்ணலேந்திடும்வேற்படையாணையாலனையா
னுண்ணிலாவுயிர்கொளவஞ்சியெருவைநீருண்டு
கண்ணனார்படைசிறிதுதன்வன்மையுங்காட்டித்
துண்ணெனப்பின்னர்மீண். (௨௩௮)

மீண்டகாலையில்வீரகோளரியவண்வீழ்ந்து
மாண்டுளானெனமயங்கினனங்கதுவயமார்த்
தாண்டனென்பவன்கண்டுதன்றனிச்சிலைகுனித்து
மூண்டசெற்றமொடணுகினன்கதிர்ப்பகைமுன்னர். (௨௩௯)

ஓங்கல்வாகுடைவீரனேர்ந்திடுமுனொண்கையிற்
றாங்கும்வில்லினையவுணனோராயிரஞ்சரத்தா
லாங்கணந்துணித்தாயிரங்கணைநுதலழுத்த
வேங்கினார்சுரரனையன்வேறொருசிலையெடுத்தான். (௨௪௦)

எடுத்தகார்முகம்வாங்குமுன்னிரவியம்பகைஞன்
றொடுத்துநூறுகோலதனையுமோரிருதுணியாப்
படுத்தோராயிரம்பகழியாற்றேரொடும்பரியை
முடித்துவாளியோரேழுநூறுய்த்தனன்மொய்ம்பில். (௨௪௧)

தேரழிந்திடச்சிலையதுமழிந்திடத்திறல்சேர்
பேரழிந்திடத்தனிமையாய்நின்றவன்பிரியா
வூரழிந்திடவறியனும்பரிதிபோலுற்றான்
காரழிந்திடவார்த்தனன்கிளர்ந்தெழுங்கதத்தான். (௨௪௨)

பராகமாப்புவியகழ்ந்திடுபணைமருப்பிரட்டை
வராகமாயிரத்தாற்றல்பெற்றுடையசூர்மகன்மேல்
விராகநெஞ்சுடைவிறற்கதிர்பாய்ந்தனன்விண்மே
லிராகுவின்மிசைத்தினகரன்வாவினானென்ன. (௨௪௩)

பாய்ந்துதிண்டிறல்வெய்யவன்வெய்யவன்பகைஞ
னேந்துவார்சிலைபறித்திருதுணிபடுத்தெறிய
வேந்தன்மாமகன்வெகுண்டுதன்மருங்கிடைவிசித்த
நாந்தகம்முரீஇக்குற்றினன்மருமத்தினடுவண். (௨௪௪)

வீரவெய்யவனுரமிசைச்செலுத்தியவெங்கட்
கூரும்வாட்படைவாங்குமுன்னங்கவன்குருதி
சூரியன்பகையகலம்வந்துற்றதுதூயோன்
றுரைவாளொன்றுமாறுபோய்க்குற்றியதகவின். (௨௪௫)

குற்றிவாங்குமுன்வீரமார்த்தாண்டனுங்கோதித்துக்
கற்றைவெஞ்சுடர்ச்சுரிகையைமருங்குறைகழித்து
மற்றவன்மணிமார்பத்துவயிரவான்கவச
மிற்றிடும்படிகுற்றினன்யாவருமிரங்க. (௨௪௬)

கிளைத்திடுந்திறல்வெய்யவன்குற்றலுங்கேடு
விளைத்தசூர்மகன்றன்னுடைச்சுரிகையான்மீட்டுங்
குளத்தின்மூழ்குறக்குற்றினனன்னதோர்குற்றிற்
களைத்துவீழ்ந்தனன்கால்பொரமறிந்தகற்பகம்போல். (௨௪௭)

தாழ்ந்தசோரியுமலக்கணும்பெருகுறத்தடந்தேர்
வீழ்ந்தவன்றனைவிளிந்தனனிவனெனவிடுத்துத்
தாழ்ந்ததோர்பெருந்தனுவினையெடுத்துழிதன்னிற்
சூழ்ந்ததானையோடேற்றனன்சூரியன்பகைஞன். (௨௪௮)

ஏற்றுநேர்வருசூரன்மாமதலையையெதிர்ந்து
போற்றலார்புகழ்வீரராக்கதனெனும்பொருநன்
காற்றின்வந்தனன்றுணைவர்கடொலைந்ததுங்கண்டான்
சீற்றமுள்ளுறநிமிர்ந்தெழக்குனித்தனன்சிலையை. (௨௪௯)

சிலைகுனித்தொருபத்துநூறயிற்கணைதெரிந்தே
யொலியுடைக்கழற்சூரன்மாமதலைமேலுய்ப்ப
விலகியத்தொகைப்பகழியானம்பிதன்வியன்றேர்
வலவனைத்தலைதுணித்தனன்வாளிநூறதனால். (௨௫௦)

நூறுவாளியாற்சூதன்மாண்டிடுதலுநொடிப்பில்
வேறொர்பாகனைவீரராக்கதனிறீஇவெகுளா
வாறுமாமுகனடிநினைந்தாயிரங்கணையாற்
கூறுசெய்தனனவுணர்கோன்குருமணிமகுடம். (௨௫௧)

உவமைநீங்கியவைவகைத்தாயவேற்றுருவின்
மவுலியிற்றிடத்திருவின்றிமன்றநாணெய்தி
யவதியில்லதோர்பெருஞ்சினமூண்டெழவவுணன்
குவடிலாமணிக்குன்றுபோனின்றனன்குறுகி. (௨௫௨)

மணியிழந்திடுமரவுபோற்கதிரிலாவான்போற்
பணையிழந்திடுங்கற்பகப்பழுமரந்தனைப்போற்
றுணைமருப்பினையிழந்திடுந்தந்திபோற்றொல்லை
யணியிழந்திடுமகளிர்போலழகிலனானான். (௨௫௩)

இற்றொழிந்திடுமகுடநீத்தேவலரளித்த
கற்றையொண்சுடர்மவுலியொன்றினைமுடிகவித்து
வெற்றிவீரராக்கதன்விடுசரமெலாம்விலக்கி
மற்றவன்சிலைதுணித்தனன்வாளியாயிரத்தால். (௨௫௪)

ஆடல்வெஞ்சிலையறுத்தலும்வயமுடையரக்க
னாடியோர்தனுவெடுக்குமுன்னாகிளங்கதிரை
வீடருந்தளையிட்டவன்விசிகமாயிரத்தாற்
பாடுசெய்தனனனையவன்றனதுதேர்ப்பரியை. (௨௫௫)

மாய்ந்துமாத்தொகைபடுதலும்வீரனோர்மணித்தேர்
பாய்ந்தகாலையிலிரவிமாற்றலனவன்பாணி
யேந்துவில்லினையாயிரம்பகழியாலிறுப்ப
வேந்தன்மாமகன்றன்மிசையயிலொன்றுவிடுத்தான். (௨௫௬)

அங்கதுகாலையிலாயிரகோடி, துங்கநெடுங்கணை தூர்த்தனனார்ப்பப்
புங்கவனுக்கிளையான்புயமென்ன, வெங்கணைவீசிவிலக்கினனின்றான். (௧௯௦)

விலக்கியகாலைவெகுண்டிவனாவி, கலக்குவனென்றுகடுஞ்சரம்வெய்யோ
னிலக்கம்விடுத்திடவேந்தறுத்தான், கொலைக்கணையாயிரகோடிதொடுத்தே. ()

வெற்றிகொள்வான்பினும்வெங்கணைகோடி, செற்றமொடேசெறிவித்திடுகாலை
மற்றவைசிந்தினன்வாளிகணூறு, நெற்றியில்விட்டனனீள்புயவீரன். (௧௯௨)

அச்சுதனாமவுணன்குளமெய்தி, மெய்ச்சரநூறும்விளிந்துபின்விண்ட
வச்சிரமாகியமால்வரையொன்றி, னுச்சியினுற்றபொன்னூசிகளென்ன. (௧௯௩)

நூறயில்வாளிநுதற்கிடைசென்று, மூறிலனாகியுறுந்திறனோக்கி
யாறுமுகேசனயிற்படையல்லா, லீறுசெயாதிவன்யாக்கையையென்றான். (௧௯௪)

என்றிடும்வீரனிதற்பினும்வாளி, துன்றுபல்கோடிசொரிந்திடவெய்யோன், வன்றி
றல்வெங்கணையாலவைமாற்றி யொன்றுடனேழ்கணையொண்புயமுய்த்தான். ()

அம்பிருநான்குமணைந்துடனூடன், மொய்ம்பினன்மொய்ம்புறமூழ்கியுள்ளூற்ற
செம்புனலுண்டுசெழும்பிடர்போழ்ந்தே, யும்பர்வெருக்கொளவோடியமாதோ. ()

ஓடியவேலையுளைந்திடுநெஞ்ச, னுடல்கொண்மொய்ம்பினனவ்வசுரேசன்
பாடுறுதேர்விடுபாகர்தமெய்யிற், கோடிபல்கோடிகொடுங்கணைவிட்டான். (௧௯௭)

அலகினெடுங்கணையாகமழுந்த, வலவர்களாற்றவருந்தினராகிப்
புலவொடுசோரிபுறத்தில்விளங்க, விலவமலர்ந்தெனயாருமிருந்தார்.  (௧௯௮)

அங்கதுநோக்கியழன்றசுரேசன், செங்கணையைம்பதுதீயெனவோச்சி
வெங்கண்விறற்புயன்மேதருதேரைப்,பொங்குளைமாவொடுபொள்ளெனவட்டான்.

அட்டிடுகொலையடற்புயனாங்கோர், வட்டணையாழிகொள்வையமதேறி
நெட்டழல்வாயுநெடும்படைதன்னைத், தொட்டனனங்கதுசூரனறிந்தான். (௨௦௦)

வேறு.

வீறாகியவசுரர்க்கிறைமிகமூரல்படைத்து
மாறாகவொர்படைதொட்டிலன்வரிவில்லொடுநிற்பச்
சூறாவளியழன்மாப்படைசூரன்மிசைதாக்கி
யூறாயினநூறாயிரமுதிராயினபிசிராய். (௨௦௧)

காற்றின்படைகனலின்படைகண்டம்பலவாகக்
கூற்றின்படைகதிரின்படைகூடத்தொடுத்திடலுஞ்
சீற்றங்கெழுசூரன்மிசைசென்றேயவைதாமு
மேற்றந்தனையிழந்தேகடிதிறந்திட்டனவன்றே. (௨௦௨)

அருணன்படைமறலிப்படையழிவெய்தனுமம்மை
சரணந்தனில்வருசத்திகடருமைந்தரிற்றலைவன்
வருணன்படைநிருதிப்படைமகவான்படைமூன்று
முரணங்கொடுகொடியோனுரமொய்ம்பிற்புகவிடுத்தான். (௨௦௩)

ஏயுற்றவையவுணர்க்கிறையிருதோளுரமெய்தி
வீயுற்றனவதுகாலையில்வீரங்கெழுமொய்ம்பன்
மாயப்படையவுணப்படை * வல்லேசெலவிடுப்பப்
போயப்படையவன்மெய்யிடைபுகுந்தேபொடியான. (௨௦௪)

---

* அவுணப்படை - அசுரப்படைக்கலம்.

விண்ணோர்படையிவையாவையும்விளிவாதலும்வீர
னண்ணான்பெருவிறல்கண்டனனனிவிம்மிதனாகி
மண்ணோடுயிர்த்தொகையாவையும்வகுத்தோன்படைநளினக்
கண்ணோன்படையொடுகூட்டுபுகடிதிற்செலவிடுத்தான். (உ0ரு)

விடுக்குற்றிடுமயன்மால்படைவிரைந்தேசினம்வீங்கி
யடுக்குற்றிடுமுருமுப்புகையழல்கால்பலபடைகண்
மடுக்குற்றிடுபுணரித்தொகைவகுத்தெவ்வகையுலகு
நடுக்குற்றிடவவுணற்கெதிர்நடந்திட்டனமாதோ. (உ0சா)

ஆண்டேவருமயன்மால்படையவுணன்றடமார்பங்
கீண்டேகுதுமென்றேயவன்கிளர்தாரகலத்தின்
மூண்டேசினமொடுதாக்கியமுழுமாமணிவயிரச்
சேண்டோய்கிரிதுளைப்பான்முயல்சிறைவண்டினமெனவே. (உ0எ)

மாயோன்படையுலகந்தருமறையோன்படையவுணத்
தீயோனுரந்தனிற்பாய்ந்துதிருத்தொல்வலிசிந்தி
மீயோங்கியவசுரேசரும்விண்ணோர்களுநோக்கி
யேயோவெனவசையெய்தியிரிந்திட்டனவன்றே. (உ0அ)

மீளுற்றவையிரியுஞ்செயல்விழிதீயுறநோக்கி
நீளுற்றிடுதிறன்மொய்ம்பினனிமலன்வரமுன்னிக்
கோளுற்றிடுபெருவிம்மிதங்கொண்டுற்றிடவண்ட
மாளுற்றிடுமவுணர்க்கிறைநகைசெய்திவையறைவான். (உ0கூ)

முத்தேவரின்முதலாகியமூவாமுதல்வரத்தா
லெத்தேவர்கள்படையுய்க்கினுமெனைவெல்கிலவெந்தப்
புத்தேள்படைவிடினும்மெதிர்பொரவேயொருபடையு
முய்த்தேதடைவினைசெய்கிலவற்றின்வலியுணர்வேன். (உக0)

ஊனீத்திடுதவவிண்ணவருலகம்புகழயன்மா
லானீத்துளபடையென்னிடைசார்கின்றதொர்தன்மை
மாநீத்தமெலாமுண்டிடுவடவைத்தழலதனைத்
தேனீத்தொகைதசையீதெனச்சேருந்திறனன்றே. (உகக)

தெரிந்திட்டனநீயோச்சியதிறல்வெம்படையென்பாற்
புரிந்திட்டதொர்வயமொன்றிலைபொள்ளென்றுரமேவி
முரிந்திட்டனமறிந்திட்டனமுடிந்திட்டனபொடிந்தே
யெரிந்திட்டனகரிந்திட்டனவிடைந்திட்டனவல்லால். (உகஉ)

வில்வன்மைகொள்சரவன்மையும்விண்ணோர்படைக்கலத்தின்
பல்வன்மையும்பிறவாகியபடைவன்மையுமியல்பாந்
தொல்வன்மையுங்கண்டேயுனைத்தொலைவில்படையொன்றாற்
கொல்வன்னெனக்காலந்தெரிகூற்றாமெனநின்றேன். (உகங)

என்றேவசுரன்செப்பலுமிளையோனினியொன்றா
லொன்றார்களிற்றலைவன்வலியுணர்வேனெனவுன்னத்
தொன்றாளையின்மூன்றட்டருள்ளோன்படைக்கலத்தை
மன்றாரருள்புரிசிந்தனைவழிபாட்டொடுவிடுத்தான். (உகச)

விடுங்காலையினிறைவன்படைவிடம்வெங்கனலசனி
கொடுங்காவிருள்கதிர்வெய்யவன்கூற்றம்பலகூளி
தொடுங்கார்முகச்சரமாரிகள்சூலம்புடைசுற்ற
வடுங்காலமிதெனவேநெடிதார்த்துற்றதையன்றே. (உகடு)

உறுகின்றதொர்படைநோக்கினனுரமுற்றெனக்குடைந்தே
யிறுகின்றதொர்படைமற்றலவீசன்படையீதாற்
பெறுகின்றவப்படையாலிதுபிழைசெய்குவலென்னாச்
செறுகின்றதொரவுணர்க்கிறைசிவன்றொல்படையெடுத்தான். (உகசு)

ஊறேற்றிடுதன்சிந்தையினுறுபூசனைபுரிப்பி
யாறேற்றிடுசடிலத்தவனடன்மாப்படைதொடுப்ப
நீறேற்றிடுமொய்ம்பன்விடுசிமலப்படையெதிர்போய்
மாறேற்றமர்புரிந்திட்டதுவையத்தவர்வெருவ. (உகஎ)

வேறு.

காண்டருநுதல்விழிக்கடவுண்மாப்படை, யாண்டவையிரண்டுநின்றுடலாற்றியே மாண்டிடுமுலகெனவானம்போற்றிட,மீண்டனவொல்லையில்விட்டுளோர்கள்பால்.

அன்னதுநோக்கியேயசுரர்மேலையோ, னின்னவைகொல்லுனக்கியன்றவன் மைக, ளுன்னுயிரின்னினியொழிப்பன்காண்கெனாத், தன்னெடுஞ்சிலைவளைஇச்ச ரங்கள்சிந்தினான். (உகக)

துன்புறுவடிக்கணைசூரன்சிந்தலுந், தன்பெருஞ்சிலையினைத்தானும்வாங்கியே முன்புறநெடுஞ்சரமுகிவிற்றாவினான், பொன்புனையலங்கலம்புயத்துவள்ளலே. ()

அத்தகுமெல்லையிலவுணர்மன்னவன், முத்தலைநெடுங்கணைமூவைந்தேவியே வித்தகமொய்ம்புடைவீரவாகுவின், கைத்தலவில்லினைக்கண்டமாக்கினான்.(உஉக)

சிலையதுதுணிதலுஞ்சீறிவீரனே, நிலையுடைவேலினையெடுத்துவீசலுந் தொலைவறுவரம்பெறுசூரன்மார்பெனு, மலையிடைக்குறுகியேமற்றதிற்றதே. ()

இற்றுழியவுணர்களிறைவன்மாலயன், மற்றுளகடவுளர்வலியுங்கொள்வதோர், கற் றையங்கதிர்மணிக்கதையொன்றேச்சினான், வெற்றிகொண்டிலவியவீரவாகுமேல்.

திண்மைகொள்பஃறலைச்சேடன்பாங்குளா, ரெண்மரொடொன்றியோரியற் கைத்தாகியே, யுண்மலியார்ப்புடனெழுகிச்சென்றென, வண்மணிகறங்கிடமணித்த ண்டேற்றதே. (உஉச)

வெங்கதைவருதலும்வீரவாகுவோர், செங்கதையெதிருறச்செலுத்திநிற்றலு, மங்க தைநீறுசெய்தவன்றன்மார்பிடைத், துங்கதைதன்னொடுதுண்ணென்றெய்திற்றே.

மேக்குயர்பெருஞ்சினவீரவாகுவின், மாக்கிளரகலமேல்வயிரமாக்கதை தாக்கலும்விண்டதுதாரைச்செம்புனீர், தேக்கியநதிகளிற்றிரைத்துச்சென்றதே. ()

ஆழ்ந்திடுசோரியனவுணன்றண்டினாற், போழ்ந்திடுமார்பினன்புகையுநெஞ்சினன் றாழ்ந்திடும்விறலினன்றளரும்யாக்கையன்,வீழ்ந்தனனமரர்கள்வெருவியோடவே.

ஆற்றலின்றாகியேயண்ணல்வீழ்தலு, மேற்றிகழ்வலவனும்விசாலியென்பவன், றே ற்றுறுபான்மையைச்சிந்தித்தோர்புடை, காற்றெனத்தேர்கொடுகடிதுபோயினான்.

போந்திடுகாலையிற்புலம்பிவீழ்ந்துளான், மாய்ந்திடுஞ்சரதமாமென்றுமாறிலா, ளய் ந்தனன்சிலைகுனித்தப்புமாரிதூய்க்,காய்ந்தனன்சென்றனன்கணத்தின்றானைமேல்.

பொன்றிடாவரத்தினான்பூதசேனைமேற், சென்றனன்கணைமழைசிதறிக்கோறலு நின்றவையிரிந்தனநெடியதீங்கதி, ரென்றினையடைந்திடுபனியினீட்டம்போல். ()

தாக்கிகல்வீரருஞ்சயங்கொண்மொய்ம்பனு, நீக்கமிலிராயிரநீத்தத்தானேயு, மூக்கிய வலியழிந்துடைந்ததன்மையை, நோக்கினன்பன்னிருநோக்கங்கொண்டுளான். ()

ஆண்டதுவேலையிலாறுமாமுகன், பாண்டிலந்தேர்மிசைப்பாகைநோக்குறு வேண்டகுசூரன்மேலிரதமொய்யெனத்,தூண்டுதியென்றனன்சுரர்கள்போற்றவே.

வேறு.

இனையறுமுருகனிவ்வாறிசைத்தலுமினையதோரா
வுணர்வுறுபவனனென்னுமொருதனிப்பாகனுகர்
கணமணிசெறிந்தபொற்பிற்காமருகடவுட்டேரைத்
துணையறுசூரன்முன்னர்த்துண்ணெனத்தூண்டியுய்த்தான். (உகங)

ஆயதுகாலைதன்னிலவுணர்கோனநந்தகோடி
ஞாயிறுதிரண்டொன்றாகிஞாலமேலிருளையோட்டிச்
சேயுயர்விசும்பைநீங்கிச்செருநிலத்துற்றதென்னத்
தூயதோர்குமரன்போரிற்றோன்றியதோற்றங்கண்டான். (உகச)

முண்டகமலர்ந்ததன்னமூவிருமுகமுங்கண்ணுங்
குண்டலநிரையுஞ்செம்பொன்மவுலியுங்கோலமார்பு
மெண்டருகரமீராறுமிலங்கெழிற்படைகள்யாவுந்
தண்டையுஞ்சிலம்புமார்க்குஞ்சரணமுந்தெரியக்கண்டான். (உகரு)

சூரெனுமவுணர்கோமான்றொல்லைநாணோற்றவாறும்
பாரிடைமுடிவின்றாகிப்பல்லுகமிருந்தவாறு
மாரணமறிதறேற்றாவாறுமாமுகத்தெய்வையன்
பேரெழிலுருவநோக்கிப்பெரும்பயன்கோடற்கேயோ. (உகசா)

எஞ்சலிலவுணர்செம்மலிங்ஙனமமரதாற்றித்
துஞ்சிலென்றொலைவுற்றாலென்றூயவாலறிவின்மிக்கோர்
நெஞ்சினுமளத்தற்கொண்ணாநிருமலக்குமரமூர்த்தி
செஞ்சுடர்வடிவங்கண்டுதீவினைநீங்கியுய்ந்தான். (உகஎ)

பூவுலகண்டமெல்லாம்புரந்திடுஞ்சூரன்றன்னைத்
தீவினையாளனென்றேசெப்புவர்சிறப்பின்மிக்க
மூவிருமுகத்துவள்ளன்முன்னர்வந்தெய்தப்பெற்று
ளுவிவன்றவத்திற்கன்றியறத்திற்குமுதல்வனன்றே. (உகஅ)

இன்னமுமுனிவர்தேவர்யாவருமினையனென்றே
யுன்னருந்தலைமைத்தாகுமொருதனிக்குமரன்றன்னைத்
தன்னிருவிழியாற்கண்டான்றனவர்க்கிறைவனென்று
லன்னவன்றவத்தின்பேற்றையாரறிந்துரைக்கற்பாலார். (உகக)

பொருசமர்விளைப்பான்போலப்பொருக்கெனப்போந்துசூர
னிருவிழிதன்னிற்காண்பானெளிதுதன்வடிவங்காட்டி
யருள்துபுரிந்தானென்னினிருதியங்குமரன்மாயத்
திருவிளையாடல்யார்க்குந்தெரிகிலபோலுமன்றே. (உசO)

சிந்தையாலறிதற்கொண்ணாத்திருவுருவிழியாற்கண்டு
முந்துதானின்றசூரன்முழுதுலகடுவானின்றோன்
மைந்தனுமிவனென்றுன்னிமனத்தினில்வெகுளிதூண்டக்
கந்தவேடன்னைநோக்கியினையனகழறலுற்றான். (உசக)

வேறு.

சேனையாய்நினைச்சூழ்ந்தவர்செருவலியழிந்து
போனபோனதோர்மாதிரந்தெரிந்திலபூத
மானவீரருமழிந்தனர்கிளைத்தொழில்வல்ல
வேனையோர்களுமென்னொடுபொருதனரிறந்தார். (௨௪௨)

இற்றநின்பெரும்படைக்கெலாந்தலைவனுமென்பா
லொற்றுவந்துளவீரனும்பொருதுயிரொழிந்தான்
மற்றுநீயொருபாலனேயென்னொடுமலைந்து
கொற்றமெய்துதிநன்றுநன்றுன்னுளக்குறிப்பு. (௨௪௩)

மேலதாகியநின்னுடைத்தாதையும்விண்ணு
ஞாலமும்புரிந்துதவியநான்முகத்திறையு
மாலும்வெஞ்சமர்புரிதிறங்கருதிலர்மற்றோர்
பாலன்வல்லைகொலென்னொடும்போர்த்தொழில்பயில. (௨௪௪)

முந்தைநாள்வலியில்லதோரடுக்கலுமுன்யான்
றந்தசெல்வத்தின்மயங்கியதாரகாசுரனும்
புந்திநீங்கியவவன்படைத்தலைவரும்போல
மைந்தவென்னையுநினைந்தனைபோலுநின்மனத்தில். (௨௪௫)

தேக்குசீரினேன்வரத்தியலுன்னலைசிதையா
வாக்கமுன்னலைபெருமிடலுன்னலையடலின்
வீக்கமுன்னலைபடைத்திறமுன்னலைவெம்போ
ரூக்கமுன்னலைசிறுவநீபெருஞ்சமர்க்குற்றாய். (௨௪௬)

கமலமேலுறைபகவனுமாயனுங்ககனத்
தமரர்செம்மலுமாதிரக்கிழவருமழுங்கச்
சிமையமங்கையுயிரங்குறவென்னொருசிலையா
லிமையொடுங்குமுனின்வலியழிக்குவனென்றான். (௨௪௭)

வேறு.

சூரனென்றுரைபெற்றுள்ளதொல்லையோனினையதன்மை
வீரமுந்திறனுஞ்சீரும்வெகுளியுங்கொண்டுசெப்ப
வாரருளுருவாய்நின்றவாதியங்குமரன்கேளா
மூரலுஞ்சிறிதுதோன்றவித்திறமொழியலுற்றான். (௨௪௮)

வெற்றியுமுடையமாற்றன்மிகுதியுமுடையமேன்மை
பற்றியுமுடையமெண்ணில்படைகளுமுடையம்வீயாப்
பெற்றியுமுடையந்தானைப்பெருங்கடலுடையமென்று
மற்றினியகந்தைகொள்ளேன்மாற்றுதும்வல்லைமன்னோ. (௨௪௯)

வரமிகுசிறப்பினேமைமழவிளங்குமரன்கொல்லோ
பொருதுவென்றிடுவான்வல்லனென்றுநின்புந்திகொண்டாய்
பெரிதுநீமடவைமாதோபிரான்றனிநெற்றிநாட்டத்
தொருசிறுபொறியேயன்றோவுலகெலாமடுவதம்மா. (௨௫0)

அறிவுடைமுதியரென்றுமாண்டிளையோர்களென்றுஞ்
சிறியவர்பெரியரென்றுந்திருத்தகுவளத்தரென்றும்
வறியவரென்றும்வீரர்மதிக்கிலர்யாவரேனும்
விறல்வலிபடைத்துநேரின்வெஞ்சமர்விளைப்பரன்றே. (௨௫௧)

நூற்றுடனெட்டதென்னநவனூறுமுகத்தின்காறும்
பேற்றுடனினிதுவைகும்பெரியசின்வலியையின்னே
தேற்றமதுறுதகொள்கைச்சிறியநம்வன்மைதன்னு
னூற்றுடைப்பாலிற்புக்கவுறையெனவடுதுமென்றான். (உருஉ)

வேறு.

என்னுமுன்வெகுண்டவுணர்கோனிருநிலந்தன்னை
முன்னளந்தவன்போலண்டமுகடுதோய்வுற்ற
கொன்னெடுஞ்சிலையொன்றினைக்கரத்தொடுகுனிப்ப
வன்னபான்மையைக்கண்டனனறுமுகக்குமரன். (உருஙு)

மாலயன்சுரர்பல்லியமியம்பிவாழ்த்தெடுப்ப
வாலமார்வனத்தெம்பிரானுடையவந்நான்
மேலைமூதண்டமுகடுறவெடுத்ததோர்வியன்றாட்
கோலமென்னவோர்நெடுஞ்சிலையெடுத்தனன்குமரன். (உருச)

அடற்பெருந்திறற்சண்டிதன்பெருமிதமடக்கிப்
படித்தலந்தனையருளுவானுடல்செய்பரம
னெடுத்தசேவடிபகிரண்டமட்டிடாவியல்பாற்
றடுத்தசெங்கைபோற்குனித்தனனறுமுகன்றனுவை. (உருரு)

குனித்தவில்லிடைக்குமரவேணுனொலிகொண்டா
னனைத்துமண்டங்களுடைந்தபேரோதைபோலவுணன்
சினத்துமாறுதன்குணத்திசையெடுத்தனன்செகத்திற்
பணித்தடங்கடல்யாவுமார்த்துடைந்திடும்பரிசின். (உருசா)

அள்ளிலைப்படையவுணர்கோனடுசரமழைதூய்
வள்ளறன்னையுந்தேரையுமுலகையுமறைப்பத்
தெள்ளிதிங்கிவன்விஞ்சையென்றெந்தைசிந்தித்துக்
கொள்ளைவெங்கணைதுரந்தவையாவையுங்குறைத்தான். (உருஎ)

குறைத்தகாலையிற்சினவியேபின்னருங்கொடுநஞ்
சுறைத்தபொற்கணைபலதொடவாளிகளோச்சி
யறுத்துமற்றவைகுமரவேளவுணர்கோன்றன்னை
மறைத்துவிண்ணெறிமாற்றினன்பகழிமாமழையால். (உருஅ)

ஆனபான்மைசேர்பகழியின்படலிகையவுணன்
சோனைவாளியாற்றுணித்திடைவீட்டியேசுரர்தஞ்
சேனைகாவலற்கண்டனன்வினைத்தலைசிந்தி
ஞானநாயகத்தானுவைக்காணுநற்றவர்போல். (உருகு)

கண்டுதீயவன்பத்துநூறாயிரங்கணைக
ளண்டநாயகன்குமரன்மேல்விடுத்தலுமவற்றை
யெண்டருஞ்சரமாரியால்விலக்கியீரேழு
புண்டருங்கணையுய்த்தனனங்கவன்புயமேல். (உசாo)

கயப்பொருப்பினையுரித்தமால்வரைதருகாளை
வயப்பொருப்பினையடுகணைசூரனும்வலியோன்
புயப்பொருப்பினையெய்தியேதுளைத்திலபுரைதீ
ரயப்பொருப்பையுற்றடல்பெறாவழலவன்கதிர்போல். (உசாக)

மாயைதன்மகன்வச்சிரயாக்கையின்வலியை
நாயகன்றிருமதலைகண்டழலெழநகைத்துத்
தீயவன்பினும்விடுவதோர்சரமெலாஞ்சிந்தி
யாயிரங்கணையாலவன்சிலையினையறுத்தான். (௨௬௨)

சிலையினைத்துணித்திடுதலுமவுணர்கோன்செயிர்த்து
மலையினைத்தடிந்தவன்மிசைமலரயன்றந்த
விலையயிற்படையொன்றினையெறிதலுமீரேழ்
கொலையுடைக்கணைதூண்டியேயன்னதைக்குறைத்தான். (௨௬௩)

ஏறுசேவகத்தவுணர்கோனயிற்படையிறலும்
வேறோர்கார்முகம்வாங்கினன்சரமழைவீசி
மாறுமாறவன்றொடுக்தொடுங்கணையெலாமாற்றி
யாறுமாமுகன்புயத்திலேழ்வாளிதொட்டார்த்தான். (௨௬௪)

செங்கதிர்ப்பகைதன்னைமுன்னுதவினான்செலுத்தும்
வெங்கணைத்தொகைபரஞ்சுடருருவமாம்விமலன்
றுங்கமிக்கதோள்புக்குநுண்டுளியதாகிப்
பொங்கனற்றிரட்பட்டதோர்பூளைபோன்றனவால். (௨௬௫)

மொய்யிருங்கணைபட்டுநீறாதலுமுருகன்
வெய்யசூர்வலிநன்றுநன்றாலெனவெகுளா
வையிரண்டுவொன்பகழியாலவன்சிலையறுத்துச்
செய்யதேரையுமாயிரங்கணையினாற்சிதைத்தான். (௨௬௬)

ஆழிபூண்டிடுமிரதமுமங்கையிற்சிலையும்
பூழியாதலுமரசனுக்கேமமாய்ப்போந்த
வேழிரண்டுநூறாயிரந்தேரையுமிமைப்பி
னாழிநாயகன்றன்சரமழையினாலொழித்தான். (௨௬௭)

சேமமாகியேநின்றிடுதேரெலாஞ்செவ்வேள்
காமர்வாளியாற்சிதைத்தலுமன்னதுகண்டான்
றாமவெங்கனறூண்டியவிழியுடைச்சூர
னேமமாகியேகொண்டிடுசூலமொன்றெறிந்தான். (௨௬௮)

நண்ணலன்விடுமுத்தலைப்படையைநாற்கணையாற்
பண்ணவன்றிருமாமகனிருதுணிபடுத்துத்
துண்ணெனக்கணையேழினாலவன்குடைதுணியா
வண்ணலஞ்சுடர்முடியையோர்கணையினாலறுத்தான். (௨௬௯)

மணிபடுத்தியமவுலியையறுத்தபின்வலியோன்
பணிபடுத்தமெய்யெங்கணும்பகழிகள்போக்கி
யணிபடுத்தியேபுனைதருமதாணிகளனைத்துந்
துணிபடுத்தினன்மறைகளுந்துணிந்திடற்கரியோன். (௨௭௰)

ஆனகாலையிற்சூரபன்மாவெனுமரசன்
மானவன்மையிற்குறைந்ததுநோக்கிமாடுள்ள
சேனைகாவலர்நாற்படைதன்னொடுஞ்சேர்ந்து
சோனையாப்படைவழங்கியேகுமரனைச்சூழ்ந்தார். (௨௭௧)

ஏழுநேமியுமெறிந்துமேருவைவளைந்தென்னக்
கேழில்பல்படைவீசியேயார்த்துடன்கிளர்ந்து
சூழும்வெய்யவர்தானையைக்கண்டனன்றன்னாட்
பூழியாகவேயவுணரூரட்டவன்புதல்வன். (௨௭௨)

குருதிவேற்படைகொண்டவன்றன்புடைக்குழுமிப்
பொருதிறற்பெருந்தானையைப்பொள்ளெனவடுவான்
கருதியாங்கொருகரத்தினிலிருந்திடுகடவுட்
பரிதியம்படைதொட்டனனிரவியிற்படர. (௨௭௩)

இலகும்வெய்யவனடுவுநாள்யாமத்தினேகி
யலகில்பேரிருளட்டெனவாழிபோயவுணர்
தலையுமாகமுங்கைகளுமடிகளுந்தடந்தோண்
மலையும்வீசியபடைகளுந்துணித்ததுமன்றோ. (௨௭௪)

மேனிலாவியதேர்களைத்துணித்திடும்வெங்கண்
மானயானைகளியாவையுந்துணித்திடும்வயமாத்
தானையாவையுந்துணித்திடுஞ்சமரினைத்தாங்குஞ்
சேனைகாவலர்யாரையுந்துணித்திடுந்திகிரி. (௨௭௫)

அரந்துணித்தவாளவுணர்களடுசமருன்னி
னுரந்துணித்திடுமிகழிஞத்துணித்திடுமுரப்பிற்
சிரந்துணித்திடும்படைதொடுமுயற்சிகள்செய்யிற்
கரந்துணித்திடுமெதிர்ந்திடிற்றுணித்திடுங்கழல்கள். (௨௭௬)

குடைதுணித்திடுங்கவரிகடுணித்திடுங்கொடியின்
றொடைதுணித்திடுந்தேர்நிரைபூண்டமான்றொகையி
னிடைதுணித்திடுமவுணர்தங்கரங்களினிருந்த
படைதுணித்திடுந்துணித்திடும்பல்லியத்தொகையும். (௨௭௭)

கொற்றமிக்கதோர்கோல்கொடுவலியுடைக்குலாலன்
சுற்றிவிட்டிடுதிகிரியின்விரைவொடுசுழன்று
பற்றலார்பெருந்தானையைப்பஃறுணிபடுத்தி
யொற்றைநேமியம்பெரும்படைதிரிந்ததாலுலவி. (௨௭௮)

போரழிந்திடுமவுணர்தமுடற்குறைபுகையாச்
சோரிவன்னியாவதனிடைத்துணிந்துவீழ்பரியுந்
தேரும்யானையுமவிகளாவெம்பிரான்றிகிரி
வீரமாமகமொன்றியற்றுவதெனவிளங்கும். (௨௭௯)

வெஞ்சமர்த்தொழில்புரிதருமவுணரைவீட்டி
வஞ்சகத்தொடுமாயமாம்பேரிருண்மாற்றி
யெஞ்சலுற்றிடுங்குருதியம்பெருநிறமெய்திச்
செஞ்சுடர்க்கதிராயதாலறுமுகன்றிகிரி. (௨௮0)

நச்சுதன்னிடத்தமலையையிருத்தியநம்ப
னிச்சுதன்றனியாழிசென்றடுறுமியல்பை
யச்சுதன்கரத்தேந்தியநேமிகண்டதனை
மெச்சுதன்மையிற்புகழ்ந்ததுவிம்மிதமேவி. (௨௮௧)

தீர்த்தனுய்த்திடுநேமியம்பெரும்படைசெருவி
லார்த்ததானைநூறாயிரவெள்ளமுமடைய
மூர்த்தமொன்றினிற்றுணித்ததுமூவிருமுகத்தோன்
வார்த்தையாலவைமுழுவதுமாற்றியவாபோல். (௨௪௨)

ஆடலுற்றவேற்பண்ணவனலர்கதிர்ப்பரிதி
பாடுசுற்றியவவுணர்கோன்றானையைப்படுத்து
மோடுபெற்றதொல்புகழொடுமீண்டதுமுளிபுற்
காடுமுற்றவுந்தனிபடர்ந்துண்டதோர்கனல்போல். (௨௪௩)

கைம்மலிந்திடுகுடைபலகாம்பிடைதுணிந்து
மெய்ம்மலிந்திடுவிழுநிணச்சேற்றிடைவீழ்ந்து
பொம்மல்கொண்டுநிற்புறுவனபூவலர்தடத்திற்
செம்மல்கொண்டமர்தாமரைக்காடுபோற்றிகழும். (௨௪௪)

அழுங்கல்கொண்டதோர்கரிபரியவுணர்பேரணிகம்
வழங்கலின்றிவீழ்ந்தவிந்திடுகளேவரமலித
றழங்குதெண்டிரையுலகுளசயிலங்களனைத்து
மொழுங்கதாகிவந்தாயிடைத்தொக்கவாறொப்ப. (௨௪௫)

அகல்விசும்புகாறோங்கியகளேவரமதன்பா
னெகிழிகொண்டவாய்ப்பேயினநிணனுண்டுசிரித்து
மிகவுமார்ப்பெடுத்தீண்டுவமின்னியேயிடித்து
முகிலிருங்கணமுதுவரைச்சாரன்மொய்த்ததுபோல். (௨௪௬)

மையல்யானையுமவுணர்தமியாக்கையுமற்று
மொய்யெனக்கொடுகுருதியம்பேரியாறொழுகல்
செய்யதோர்பணிகருங்கடன்மறைத்தல்சிந்தித்து
வெய்யநஞ்சுமிழ்ந்திருநிலம்படர்தல்போல்விளங்கும். (௨௪௭)

மாணிலைப்படுபேய்சிலகளேவரவரைபோய்ச்
சோணிதப்புனலாறுபாய்ந்திடவதன்றலை
சேணிலத்துளாரரிவையர்புனைகலைதெறிப்ப
நாணலுற்றனர்பூப்பெனநகைப்பரென்றுன்னி. (௨௪௮)

சொல்லருந்திறலவுணரிற்சிலர்தலைதுணிந்து
வல்லையிற்கிளர்ந்தார்த்தலும்வலியினூற்றம்மை *
யல்லல்செய்திடுகோளிரண்டல்லதையவைபோ
லெல்லையில்லவைவந்தவென்றிரியுமாவிரவி. (௨௪௯)

நீடிவிண்படர்கொடிசிலநிமிர்கவந்தத்தின்
காடுதன்னிடைப்புகுந்துதந்தலைமிசைக்காட்டி
யாடல்யானையின்களேவரங்குத்துவவடுபோ
ரூடுகாக்கையின்முகரும்வந்தார்கொலென்றுரைப்ப. (௨௫0)

நீடலுற்றசீரவுணர்கோனுணையானிலமேல்
வீடலுற்றிடுவயவர்க்குத்தம்முயிர்மீட்டுங்
கூடலுற்றிடுதிறனெனக்கூளிகைகொட்ட
வாடலுற்றிடுமுடற்குறையநந்தகோடிகளால். (௨௫௧)

* தம்மை என்றது - சந்திரனை உளப்படுத்தி என்க.

இனையவெல்லையிலெம்பிரானெரிகதிர்ப்பரிதி
முனையில்வந்தடல்செய்ததையுணர்ந்திலன்முன்சூழ்
கனையிருங்கடற்படையெலாய்பட்டவாகண்டு
மனமருண்டொருதமியனாய்நின்றனன்வலியோன். (உ.கஉ)

நீண்டதன்னொருவேற்படையுய்த்துநீக்கினனே
பாண்டரங்கமதியற்றுவான்படையின்வீட்டினனே
மாண்டுபோகவென்றொருமொழிதன்னின்மாற்றினனே
வீண்டுதானையைமுடித்ததெவ்வாறிவனென்றான். (உகங)

தேரிழந்தனன்சிலையதுமிழந்தனன்றிறல்சேர்
பேரிழந்தனன்றானைகளிழந்தனன்பெரும்பூ
ணேரிழந்தனன்மவுலியுங்கவிகையுமிழந்தான்
பாரிழந்திடுமன்னர்போனின்றனன்படிமேல். (உகச)

நின்றிடுந்திறலவுணர்கோனெடுஞ்சினநெஞ்சிற்
றுன்றுமார்பகம்வியர்த்திடமுடித்தலைதுளக்கி
நன்றுநன்றொருபாலகன்வலியெனநகையா
வென்றிநான்முகன்படைக்கலமெடுத்துமேல்விடுத்தான். (உகரு)

வேறு.

சூர்ப்புயலன்னதொர்சூரன்விடுக்கு, மாற்படுபோதன்வயப்படைசென்று
பாற்படுமெல்லைபரஞ்சுடர்செங்கை, வேற்படைசென்றுவிழுங்கியதன்றே.(உகசு)

விழுங்குதல்கண்டனன்வெய்யவனெஞ்ச, மழுங்குதல்செய்தனனச்சுதமூர்த்தி
வழங்கியதொல்லைவயப்படையேந்தி, முழங்கழலென்னமுனிந்துடன்விட்டான்.()

விட்டிடுமாயவன்வெம்படையேகி, மட்டறுகண்ணர்தமாலுருவீன்று
கிட்டியகாலைகிளர்ந்திடுமொள்வே, லட்டதுதன்னையுமார்ந்ததுமன்றே. (உகஅ)

சயம்புனைசெம்மறனாகருணீரா, லயன்படைதன்னுடனம்புவிகேள்வன், வியன்ப
டைதன்னையும்வேற்படையுண்ணக், கயம்படுசூரதுகண்டுவிம்முற்றான். (உகக)

கறுத்திடுகிஃறதொர்கந்தரவள்ளல், விறற்படைதன்னைவிடுத்திடின்யாரே, மறுத்
திடுவாரஃதென்றுமனத்திற், குறித்தனன்மாயைகொடுத்தருள்கோமான். (ஙOO)

முப்புரநீறெழமூரல்விளைத்தோன், மெய்ப்படைதன்னைவிடுப்பதுதேற்றி
யப்படையேந்தியருச்சனைநீரா, லொப்பறுசீர்த்தியனுய்யெனவுய்த்தான். (ஙOக)

அத்தகுவெம்படையாடலியற்று, முத்தலைவேற்படைமூர்த்திகள்கோல
மெத்திசைதன்னினுநீண்டுறவார்த்து, மெய்த்தழல்வீசிவிரைந்ததுமாதோ. (ஙOஉ)

ஆடியல்யானைகளாயினவெட்டும், வீடியவேயெனவீழ்ந்தயர்வுற்ற
நீடியநேமியினின்றிடுசெந்தீ, யோடியசேடனுமூட்கியுலைந்தான். (ஙOங)

படித்தலநெக்கதுபல்வகைமேக, மிடித்தொகைசிந்தியிரிந்தனபானுத்
துடித்ததுதிங்கள்சுழன்றதுமேரு, வெடித்ததிடந்தொறும்விண்டதிவ்வண்டம். ()

இலக்கர்நடுங்கினரேனையவீரர், கலக்கமடைந்தனர்காண்டகுபூதர்
மலக்கமதெய்தினர்மற்றிதுதன்னை, விலக்கரிதாலெனவோடினர்விண்ணோர். ()

புடவிமுதற்புவனங்களனைத்து, மொடிவுறுசெல்லுமுனொய்தெனமாயு
முடிவதியற்றிடுமூர்த்திதனும்ப், படைவரவன்னதுபார்த்தனன்வள்ளல். (ஙOசு)

எந்தைதன்மாப்படையீதெனவையன், சிந்தைபுரிந்தொருசெங்கையைநீட்டி
வந்திடுமப்படைபற்றினன்மாதோ, தந்தவன்வாங்கியதன்மையதென்ன. (௧௦௭)

பெற்றமுயர்த்தபெருந்தகைகாமக், கொற்றநெடும்படையையகுமரேசன்
பற்றியெ(ா)ர்பாணிபரித்தனனின்றான், மற்றதுகண்டனன்மாயவன்மைந்தன். ()

வேறு.

விட்டவிட்டதோர்படைக்கெலாம்வேறுவேறொன்று
தொட்டிலானதனாலதுமாற்றுதறுணியான்
கிட்டுமெல்லையிலவையெலாங்கவர்ந்தனன்கேடி
லட்டமூர்த்திசேயென்பதுகாட்டினனம்மா. (௱௦௯)

என்னொடேபொருற்கிவனலால்வேறிலையினையோன்
றன்னொடேபொரற்கியானலாதிலையிதுசரத
மன்னபான்மையினெனக்குநேராயினனலது
பின்னையாருளர்தமியனுக்குவமையாப்பேச. (௱௧௦)

மானவேற்படைவன்மையும்விற்றொழில்வலியு
மேனையாயுளவன்மையுங்கண்டனனினிமேற்
பானுல்வாய்மைந்தன்செய்வதுபார்ப்பனென்றுன்னி
மோனமாகியேநின்றனனவுணர்கண்முதல்வன். (௱௧௧)

பொருளினீர்மையாற்புனைகலன்மாற்றலிற்புவிமே
லிருளினீர்மையாய்த்தோன்றினோனற்புதமெய்தி
மருளினீர்மையானின்றதுநோக்கியேவள்ள
லருளினீர்மையாலினையனமாற்றங்களறைவான். (௱௧௨)

இந்திரன்றனிமதலையையிமையவர்தம்மை
யந்தமில்பகல்சிறையிடைப்படுத்தனையதற்கா
முந்தொரொற்றனைவிடுத்தனமாங்கவன்மொழியுஞ்
சிந்தைகொண்டிலைவிடுதிலையமரர்தஞ்சிறையும். (௱௧௩)

அன்னதன்மையாலீண்டியாம்வந்தனமபரிற்
றன்னைநேரிலாதிருந்திடுதாரகன்றன்னை
முன்னமட்டிடுமுறையெனநின்னையுமுனிவா
லின்னவைகலேயடுதுமென்றேகினமீண்டும். (௱௧௪)

ஈண்டுநின்புடையீண்டியவிலக்கம்வெள்ளத்து
நீண்டதானையுநின்சிலைவன்மையுநின்றற்
றூண்டலுற்றிடுதெய்வதப்படைகளுந்தொலைந்து
மாண்டுபோயதுகண்டனைவறியனாய்நின்றாய். (௱௧௫)

கொடியதாரகற்செற்றவேலிருந்ததுநின்னை
யடுதலிங்கொருபொருளுமன்றரிதுமற்றன்றாற்
படையிழந்திடுநின்னுயிருண்டிடிற்பழியாய்
முடியுமென்றுதாழ்க்கின்றனந்தருமத்தின்முறையால். (௱௧௬)

பண்ணுகின்றதென்பற்பலவிண்ணுளோர்பலருந்
துன்னுதொல்சிறைவிடுத்தியேலுன்னுயிர்தொலையே
மன்னதன்மையைமறுத்திடினெல்லைநாயடுது
மென்னைசொல்லுனதெண்ணங்களுரைத்தியாலென்றான். (௱௧௭)

வேறுவேறுநின்றுலகெலாமளிப்பதுவெஃகி
யாறுமாமுகம்பன்னிருசெங்கைகொண்டருள்வோ
னூறுசேரவுணன்றனக்கிளையனவுரைப்ப
மாறொர்வாசகஞ்சொற்றிலனுளத்திவைமதிப்பான். (௧௧௯)

படையிழந்தனனிவனெனவுன்னியேபால
னிடைதெரிந்தனன்போலவேயிமையவர்யாப்பை
விடுதியென்னவும்வல்லனுயினன்விளிவில்லே
னடலுமாற்றலுந்தெரிந்திலன்பிள்ளைமையதனால். (௧௧௯)

மன்றலந்தொடையறுமுகன்வரப்பிலாவைக
னின்றுபேரமர்புரியநான்வறிதுநின்றிடினுங்
கொன்றிடுந்தொழில்வல்லனேதந்தைமுன்கொடுக்க
வென்றுமாய்ந்திடாவொருவரம்பெற்றிடுமென்னே. (௧௨0)

தொழுதகுந்திருமவுலியுங்கவிகையுந்துணிய
விழிவதாகியேதமியனின்றமரியற்றிடினு
மழிவதில்லையாலாவதுமிலைபுகழதனற்
பழியதொன்றுறுமங்கதுபாதுகாத்திடுவேன். (௧௨௧)

வேற்றுநீர்த்தடங்கொள்வதையன்றிவெள்ளங்க
ளூற்றுநீர்ப்பெரும்புணரியைக்கொள்வதற்குறுமோ
வேற்றதானையைப்படைகளைத்தொலைப்பதேயின்றி
மாற்றுமோவெனதழிவுறுவரத்தையுமைந்தன். (௧௨௨)

என்னையங்கவன்முடித்திடலரியதாலியானு
மன்னவன்றனையிததுணைவெல்வதுமனைத்தே
தொன்னகர்ப்பெருவளத்தொடும்படையொடுந்துன்னிப்
பின்னர்வந்தமரியற்றியேபெருந்திறல்பெறுவேன். (௧௨௩)

வசையதன்றிதுசெருச்செய்வோர்பற்பகன்மலைந்து
விசையமெய்தினுமேன்மையாம்வியப்புமாமேலுந்
திசைவிளங்குறுபுகழுமாம்யானுமிச்செய்கை
யிசைவதேகடனறிஞர்தஞ்சூழ்ச்சியுமிஃதே. (௧௨௪)

என்றுபற்பலசூழ்ச்சிகண்மனத்திடையெண்ணி
யொன்றொர்மாயையின்மந்திரந்தனையுள்ளுறுத்தி
நின்றமன்னவனெல்லையின்மறைந்தவணீங்கிப்
பொன்றிகழ்ந்திடுமகேந்திரக்கோயிலுட்போனன். (௧௨௫)

மறைந்துபோயசூர்முயற்சியைமன்னுயிர்தோறு
முறைந்தநாயகன்கண்டனனொருதனிச்செவ்வே
லெறிந்துமற்றவனுயிர்கொளநினைந்திலனின்னு
மறிந்துதீயவனுய்யுமோவெனுந்திருவருளால். (௧௨௬)

வேறு.

ஆயவேலைதனிலாறுமுகன்பான், மாயனும்மயனும்வானவர்கோவு
மேயதேவர்களும்யாவருமெய்தித், தூயவந்தனையுடன்சொலலுற்றார். (௧௨௭)

என்றுகாசிபனிடந்தனில்வந்தா, னன்றுதான்முதலாவசுரேசன்
வென்றியேகொடுவியப்பொடிருந்தா, னுன்றனோடுபொருதோடினனின்றே. ()

நீடுசூரனுடனீயமர்செய்த, லாடலேயலதையாங்கவனுவி, கோடல்சிந்தையிடை
கொண்டிலையென்னி,னேடுமோபொருதமுய்திறமுண்டோ. (௧௨௯)

துங்கமுற்றுடையசூர்தனைவேலான், மங்குவித்திடுதிமற்றதன்முன்ன
மங்கவற்கெதிருஞ்சமராற்ற, லெங்கண்வைததுடையவின்னருளன்றே. (௧௩௦)

என்றியம்புதலுமெந்தைவினுவி, நன்றுநன்றெனநகைத்தினிநர்முன்
சென்றுநின்றுசமர்செய்திடின்வல்லே, யென்றுசூர்முதலைவீட்டுதுமென்றான். ()

ஆடல்சேருமவுணன்சமராற்றா, தோடிணருமுறுநண்ணுளராகி
வீடிணர்களெனவீழ்ந்தயர்வாருங், கூடினர்குமரவேள்புடையந்தார். (௧௩௨)

சங்கமாகியுறுசாரதரானோ, ரெங்கணாயகனையெய்தியிகற்றார்
மங்குல்வானிடைமறைந்ததுதேரா, வங்கண்ஞாலமலைவுற்றிடவார்த்தார். (௧௩௩)

திகழ்ந்தபூதர்கள்செருத்தனிலெம்மை, யிகழ்ந்தசூர்நகரினிம்மதில்வீட்டி
யகழ்ந்துகோபுரமகன்கடலிட்டு, மகிழ்ந்துமீண்டிடுதும்வம்மினமென்றார். (௧௩௪)

வம்மின்வம்மினெனவல்லைவிளித்துத், தம்மினங்களொடுசாரதர்மேலோ
ரம்மகேந்திரமழுங்குறவார்த்திட், டிம்மெனக்கடிதெயிற்புறமுற்றார். (௧௩௫)

உற்றகாலைதனிலொண்மதில்காக்குங், கொற்றவீரனதிகோரன்மருங்கிற்
சுற்றுதானையொடுசோர்விலனின்றான், செற்றுபூதர்படைசென்றனகண்டான். ()

கண்டுளானனிகனன்றிதழ்கவ்வித், திண்டிபேரிதிமிலைப்பறையார்ப்பத்
தண்டலின்றியமர்தானைகளோடு, மண்டுபோர்புரியவந்தெதிர்புக்கான். (௧௩௭)

எதிர்புகுந்திடலுமேற்றெதிர்சென்றா, ரதிர்புகுங்கழலினூடுறுபூதர்
பொதிர்புகுந்தவிருள்போந்துழியெண்ணில், கதிர்புகுந்தனையகாட்சிபடைத்தார். ()

தோமரம்பரசுசூலமொடெஃக, மேமருங்கதைகளேவினர்கோரன்
மாமருங்கவுணர்மற்றியர்குன்றங், காமரம்படைகலந்துவிடுத்தார். (௧௩௯)

எடுத்துவேழகிரையெற்றினர்தேரை, யொடித்தெறிந்தனருகஸ்டுகள்பாய்மாப்
பிடித்தொர்கைகொடுபிசைந்தனர்வீரர், துடித்திடப்படிதுகைத்தனர்பூதர். (௧௪௦)

எறிவர்பல்படையுமெய்குவர்வெங்கோல், குறியவீட்டிகொடுருத்துவர்வானாற்
செறுநர்தங்களுடல்சிந்துவரிவ்வா, றறியும்வெஞ்சமரையாற்றினர்தீயோர். (௧௪௧)

சோரிபொங்கினசொரிந்தனமூளை, சாருறுங்குடர்சரிந்தனசேனங்
காரிடம்பிணகணங்களுமேனை, வீரராமவுணரும்பலர்வீந்தார். (௧௪௨)

ஈடுறுஞ்சமரிழைத்துழியிவ்வா, றாடல்வெங்கணவராற்றமுனிந்தே
சாடிவன்மையொடுதாக்கலுநில்லா, தோடினரவுணராயுளர்முற்றும். (௧௪௩)

கோரமிக்கவதிகோரனெனும்பேர், வீரன்மற்றதனைநோக்கியெகுண்டே
யோரெழுத்தனையுரத்தொடுபற்றிச், சாரதப்படைஞர்தம்மொடுநேர்ந்தான். (௧௪௪)

தலைதனிற்கரதலத்தினின்மொய்ம்பின், மலையினிற்பெரியமார்பின்முகத்தி
னுலைகழற்கணமுலைந்திடமோதிக், கொலைவினைத்தொருவனேகுலவுற்றான். ()

ஈடிலாததொரெழுப்படைபற்றா, வோடியோடியுருமுற்றெனமோதி
வீடுறாதமர்விளைத்திடுபூதர், கோடிகோடியொரிமைப்பிடைகொன்றான். (௧௪௬)

இந்தவாறவனெழுக்கொடுதாக்க, முந்துதூசிமுரிவுற்றதுகண்டான்
கந்தனேவல்செய்கணப்படைமன்னன், சிந்துமேகன்முனிவோடெதிர்சென்றான்.

சென்றபூதரிறைசெங்கையில்வைகுங், குன்றமொன்றையதிகோரனெனும்பேர்
வென்றியான்மிசைவிடுத்தலுநோக்கித், தன்றடக்கையெழுவாற்றகர்வித்தான். ()

தகருமெல்லைதரியார்கடல்வற்ற, முகிலினுண்டிடுமுரட்பெயரண்ணல்
வெகுளியோடவுணர்வேந்தனையெய்தி, யகலமீதினிலடித்தனன்மாதோ. (௩௪௧)

அடித்தலோடுமவுணர்க்கிறையானோ, னிடுக்கணெய்தியிவனுயிரையின்னே
முடிப்பனென்றுமுசலங்கொடுமொய்ம்பிற், புடைத்தனன்னுருமுவீழ்வதுபோல. ()

பூதன்மொய்ம்பிடைபுடைத்தவெழுத்தா, னேதமாமுரியவேற்றெதிர்தெவ்வைக்
காதுகைகொடுகபோலமதன்கண், மோதவேயவுணனாவிமுடிந்தான். (௩௫௧)

வாய்தல்போற்றியவப்படைவீரன், சாதலுற்றுழிதலைத்தலையார்த்துப்
பூதசேனையர்கள்பொம்மெனவேகி, மூதெயிற்றலைமுதற்கடைசென்றார். (௩௫௨)

ஆண்டியோசனையொராயிரம்வான்போ, யீண்டுசெம்மணிகளாலியலுற்று
மாண்டதியவடவாமுகமேபோ, னீண்டதோர்சிகரிநின்றதுகண்டார். (௩௫௩)

கண்டதோர்சிகரிகைகொடுதொட்டுத், தெண்டிரைக்கடலின்மேற்செலவிட்டார்
மண்டுமேருவரையின்குவடேந்திச், சண்டவாயுவிடுதன்மையதென்ன. (௩௫௪)

அன்னவேலையிலலைந்ததுஞாலம், பன்னகேசனுமிகப்படருற்றான்
மன்னுகூருறைமகேந்திரமூதூர், துன்னுதானவர்துளங்கியயர்ந்தார். (௩௫௫)

ஈண்டுபூதரெறியுஞ்சிகரந்தா, னண்டவ்வேலையிடையாழ்ந்ததுதொன்னா
ணீண்டமேனியிறைநின்றளியாமுன், மாண்டுசாய்ந்துவிழுமந்தரமென்ன. (௩௫௬)

வேறு.

பொலங்கெழுசிகரியப்புணரிசேர்தலிற், கலங்கினவிரிதிரைக்கைம்மறித்ததான்
மலங்கினமொடுசுறாவருந்திமிங்கில, கிலங்களுமிரிந்ததங்கிளைகளோடுமே. (௩௫௭)

மாதலப்புகுந்திடுஞ்சிகரிவாரியுட், பூதரங்குய்த்திடவிரைவிற்போவது
வேதமுன்கொணர்தருமீனம்வேலையிற், பாதலம்புகுந்திடுபான்மைபோலுமே. ()

கழற்கறங்கியதெனுங்கண்ணருந்திய, வழற்கொழுந்தாகியசிகரத்தாய்மணி
நிழற்பொலிந்திடுவனநீலவேலையிற், றழற்பரந்தெழுவதோர்தன்மைபோலுமே. ()

நாகரமணிவெயினனுகும்வேலையிற், சீகரமுப்பர்போய்த்தெறித்துமீள்வது
சாகரமுற்றதுதழலென்றுன்னியே, மாகரவாரிநீர்வழங்கல்போலுமால். (௩௬௦)

காமருசிகரியிற்கலைஇயமாமணி, யேமுறநிழற்றியவெழிலைநோக்கியே
பூமதுநுகர்தருபொறிவண்டானவை, தாமரைவனமெனவயிர்த்துச்சாருமால். ()

பங்கயமணிநிழற்பரப்பைநோக்கியே, யிங்கிவைதசையெனவெண்ணிப்புட்குல
நுங்கியசெல்வனகொய்தினெய்தியே, யங்கிகொலெனச்சிலவகன்றுபோயின. ()

தெழித்திடும்வேலையிற்செய்யசோதியாற், றழற்பொலிகோபுரந்தரிப்பின்றேகலாற்
கிழித்தனபணிபதிகிளர்ந்துமற்றவர், விழித்தனருருமெனவெருவியோடினார். ()

பூதர்கள்யாம்விடுபொலங்கொள்கோபுர, மோதநெஞ்சடைதலுமுதிரங்கான்றதாற்
சேதனமோவிதுசெப்புமென்றனர், மீதுறுகதிர்மணிவெயிலென்றுன்னலார். ()

பொற்பகல்சிகரியுட்பொருந்தியாழ்பவ, ரற்பகனுகருமீனவரைநுங்குமான்
முற்பகலோர்பழிமுடிக்கின்மற்றது, பிற்பகறமக்குறும்பெற்றியென்னவே. (௩௬௫)

ஆனதொர்கோபுரமளப்பிலாதமர், தானவர்கிளையொடும்வீழ்ந்ததன்மையான்
மீனுறுதிரைக்கடல்வெள்ளமேற்செலா, மாககரெயிறனைவளைக்துபுக்கதே. (௱௬௬)

காதிமெய்யற்கையிற்கால்கொண்டேகலிற், பூதலம்வெருக்கொளப்பொங்குமார்ப்பி
னின், மீதமர்காரினில்விமலன்விட்டிடும், பூதரைகிகர்த்ததப்புரிசைசூழ்புனல். ()

மைக்கடல்புவியினுமகேந்திரப்புர, மிக்கதுபோலுமென்றையமேற்கொளா
விக்கணநாடுதுமென்றுசென்றபோற், புக்கதுநகரிடைப்புணரிநீத்தமே. (௱௬௮)

மீனெனுமைந்தரைமிசைந்ததானவர்க்,கானதொரிறுவரையணுகிற்றிவ்விடை,யான
வர்ப்பொருவனென்றெண்ணிச்சேறல்போற், போனதப்பதியினுட்புணரிநீத்தமே.()

இவ்வகைநிகழ்ந்திடவெறிந்தகோபுரம், பௌவமுற்றிடுதலும்பைம்பொன்மாமதில்
வெவ்வலியரசர்கள்விளியவீறிலாக், கௌவைகொடிருநகர்க்காட்சித்தாயதே. ()

எல்லைமற்றனையதிலீண்டுசாரதர், மல்லலம்புரிசையின்வடாதுபாங்கரை
யொல்லையிற்றம்பதத்துதைப்பச்சாய்ந்தது, செல்லுறவீழ்ந்திடுசிகரமேயென. ()

மாமதில்சாய்தலும்வலியபூதர்கள், காமருநகரினுட்கலந்துநண்ணினு
ரேமருகடங்கலுழிபங்கனீண்டியோர், தாமரைமலர்த்தடந்தன்னிற்புக்கபோல். ()

கானுறுபங்கயக்கடவுட்கிப்பகல், போனதோர்காலையிற்புணரியாவையு
மாநிலங்கொள்வதுமானப்பூதவெஞ், சேனைகண்மகேந்திரபுரத்திற்சென்றவே. ()

புக்கனர்வீரர்கள்புயலின்மேனியுஞ், செக்கரங்குஞ்சியாந்தீயுங்கைகளாய்
மிக்கெழுபுணரி * யும்வேறுவேறுரு, மைக்கடலுலப்பிலவருவபோலவே. (௱௭௪)

துதித்திடவரியவனகரிற்றுண்ணென, வெதிர்த்திடுதானவரினத்தையொல்லையிற்
சிதைத்தனர்மாளிகைசிகரம்யாவையு, முதைத்தனர்வீட்டினருயர்ந்தபூதரே. ()

மதரொடுகுறுகுமவ்வயவெம்பூதர்க, ளதிர்கழலடிகளாலளப்பின்மாளிகை
பிதிர்படவுந்தலும்பிறங்குபூழிகள், கதிருறுகதியினுங்கடந்துபோனவே. (௱௭௬)

வேறு.

அங்கவ்வெல்லையிற்சாரதவேந்தர்களயில்வேற்
புங்கவன்றனைநீங்கியாமவுணர்கோன்புரத்து
ளிங்கினிப்படர்கின்றதுதக்கதன்றென்னுச்
செங்களந்தனின்மீண்டனர்சேனையுந்தாமும். (௱௭௭)

ஆனகாலையிற்பூதர்தஞ்செய்கைகளனைத்து
ஞானநாயகன்காண்குறுநல்லருள்புரிந்து
மானவேற்படைவீரருமமரரும்வழுத்தச்
சேனையாவையுங்கொண்டுதன்பாசறைசேர்ந்தான். (௱௭௮)

பாசறைப்புகுகுமரவேள்பாரிடப்பகுதி
யாசறப்புனையாவணச்சூழல்போயமர
வாசவத்தனிக்கடவுளாதியர்புடைவழுத்த
வீசனிற்சிறந்தரியணைதன்னில்வீற்றிருந்தான். (௱௭௯)

ஈண்டுதானவரிலக்கம்வெள்ளத்தருமின்னே
மாண்டுபோயினரனையரைமலிகதிர்க்கரத்தாற்
றீண்டிவான்மையிற்குறைந்தனனென்றுசெஞ்சுடரோ
னுண்டுமூழ்குவான்புக்கெனவளக்கரையடைந்தான். (௱௮0)

---

* புணரி - திரை.

வேறு.

புரந்தரனுதியர்புன்மைநீக்கியே, பெருந்திருவுதவுவான்பிரான்றன்காதல
னிருந்தனன்பாசறையீதின்றிடத், திருந்தலர்மாட்டுறுஞ்செய்கைசெப்புவாம். ()

ஒருவருமுளத்தினுமுணர்வுருவகை, யருவமதாகியேயகன்றசூர்முதல்
பொருவருமகேந்திரபுரத்துக்கோயிலுட், டிருமகண்மணமனைச்சேறன்மேயினன்.

பஞ்சடிநூபுரப்பதுமைகோயில்போ, யஞ்சியலடுத்தமெல்லமளிமேலுறுத்
துஞ்சலன்யாரொடுஞ்சொல்லுமாடலன், வெஞ்சமர்வினையமேயுன்னிமேவினன்

ஆனதொரெல்லையிலரசன்போர்செயப், போனதும்பொருததும்புறந்தந்தோமென
மாநகரதனிடைவறியன்வந்ததும், பானுவின்பகைஞனுக்கொற்றர்பன்னினர். ()

சொன்னவைமந்திரத்தொடர்புமாயமுந், தன்னுறுபடைகளுஞ்சாதனஞ்செய்வோ
னன்னதுகேட்டலுமலக்கணெய்தியே, மன்னுறுகடிநகர்வல்லையேகினன். (௩அ௫)

மணிநிரையிகலியேமாறுவில்லுமி, ழிணையறுசினகரமெய்திச்சேக்கைமேற், றணிவ
றுசூழ்ச்சியோடமர்ந்ததாதைதன், றுணையடிவணங்கியேதொழுதுகூறுவான். ()

மாற்றலர்யாவருமறியவல்லேபோ, ராற்றுதியாலெனவையமுற்பகல்
சாற்றினைவிடுத்தனைதமியனேகியே, யேற்றவர்தம்முடனிகல்செய்தேனரோ. ()

உற்றிலனறுமுகனெழிந்தவீரர்கள்,சுற்றியபடையொடுதுவன்றிப்போர்செய்தார்,ப
ற்றியமோகமாப்படையைத்தூண்டியான், மற்றவருணர்ச்சியும்வலியுமாற்றினேன்

சென்றமரியற்றியசெறுநர்யாரையும், வென்றனனத்துணைவிமலன்மாமக
னென்றொருமாப்படையுய்ப்பவென்படை, வன்றிறனீங்கியேவருந்திமீண்டதே.()

அன்னதோர்பான்மையாலனையர்யாவரும், பின்னுணர்வெய்தியேபெயர்ந்து
போயினு, ரென்னிதுவெற்றியென்றியானுமீண்டன, னுன்னெடுமுரைத்திலனுள்
ளம்வெள்கினேன். (௩௧0)

நெற்றியங்கண்ணுடைநிமலனேனையோர், முற்றருபடைகளான்முடிவின்மா
யையாற், பற்றலர்யாரையும்படுத்துநாளையே, வெற்றிகொள்குவனெனுநென்னன்
மீண்டனன். (௩௧௧)

ஞாயிறுவந்தபினண்ணலார்மிசைப், போயமரியற்றிடப்புறத்திற்சென்றன
னயதன்முன்னரேயனிகந்தனுட, னேயெனவேகினையெந்தைநீயென்றார். ()

வரந்தனிலழிவுருவள்ளலீண்டுறு, திருந்தலருடனமர்செய்தற்காகவோ
ரருந்துணைவேண்டலையதனையுன்னிமீண், டிருந்தனனிப்பகலீதென்செய்கையே.

ஓர்ந்திலையித்திறமுணர்வுளாரொடுந், தேர்ந்திலையென்னையும்விளித்துச்செப்பிலை
சார்ந்திடுநாற்பெருந்தானைதன்னொடும், பேர்ந்தனையமர்க்கிதுபெருமைப்பாலதோ.()

அமரருக்காக்கமுமவுணர்க்கேக்கமு, மிமையவர்முதல்வனுக்கின்புநல்கினை
குமரனைக்கணங்களைக்குறித்துமன்னநீ,சமரினுக்கேகுதறலைமையாகுமோ. (௩௧௫)

திகழ்ச்சிகொண்மேலவர்சிறியர்தம்மொடு, நிகழ்ச்சிகொள்போரிடைநேர்வரே
யெனிற், புகழ்ச்சியதில்லையாற்பொருதுவெல்லினு, மிகழ்ச்சியின்பாலதாமெவரெ
வர்க்குமே. (௩௧௬)

சென்றதுகிடந்திடச்சிறியனென்னினு, மொன்றிவண்மொழிகுவனுள்ளங்
கோடியர், லின்றிரவகன்றபின்னேகியாரையும், வென்றிகொண்டேகுவன்விடுத்தி
யாலெனை (௩௧௭)

கொற்றவைசிறுவனைக்கொற்றங்கொள்வதுஞ், சுற்றுறுபடையையான்றொலைக்குந்தன்மையு, மொற்றுவர்கண்டுமுனுரைக்கவெந்தைநீ, தெற்றெனமகிழ்ச்சியிற்சிறந்துவைகுதி. (கூகூ௯)

வே று.

கூரியவேற்படைகொண்டுடையோனை, வீரர்கடம்மொடுவெற்றிகொளேனேல்
வாரலனீண்டுமகிழ்ந்திறைநல்கும், பேரரசாட்சிபிடிக்கிலனென்றான். (கூகூக)

என்பதுகேட்டலுமெவ்வுலகிற்குந், துன்புபுரிந்திடுசூரபன்மாவா
முன்பன்மகிழ்ந்துமுகத்தெதிர்நிற்குந், தன்புதல்வற்கிதுசாற்றுதலுற்றான். (௪00)

மூவர்கடாங்களுமுச்சகமுள்ள, தேவருமையிருதிக்குடையோரு
மேவருமேற்கினுமெம்பியையட்ட, மேவலனாற்றலைவெல்லரிதம்மா. (௪0க)

பன்னிருசெங்கைபடைத்துளசேயோன், றன்னொடெதிர்ந்துசமர்த்தொழில்செய்வா, ரென்னலதில்லையிவன்சிறியோனென், றுன்னலெயன்மையிதொப்பிலனேகாண். (௪0உ)

குன்றமெறிந்திடுகூரியவேற்கை, வன்றிறலாளனைவன்மையில்யானே
வென்றிடுகின்றனன்மேலதுநிற்க, வொன்றுளதையவுரைப்பதுகேண்மோ. (௪0௩)

ஒற்றெனவந்துநம்மூரலைவித்துப், பற்றலர்நீடுபடைக்கிறையாகுங்
கொற்றவனைத்தனிகூடிமலைந்து, செற்றனையேகுதிசேனையொடென்றான். (௪0௪)

தந்தைபுகன்றிடுதன்மையையோரா, வெந்தைபிராற்குளமித்திறமாமேன்
முந்திறைதன்னின்முடிப்பனிதென்ன, மைந்தனைநோக்கிமகிழ்ந்தனன்மன்னன். ()

அடுசமர்செய்வகையாங்கவனேக, விடையதுநல்கிவிபத்தருமன்ன
னிடையுறுசூழ்ச்சிகளியாவுமிகந்து, மிடைதருதொல்வளமேவியிருந்தான். (௪0ரு)

தாதைதனேவறலைக்கொடுசென்றே, யாதவன்மாற்றலனுகியமைந்த
னேதமிறன்குலமேகலுமங்கட், டூதுவர்பற்பலர்துண்ணெனவந்தார். (௪0௭)

துங்கமதுற்றுளசூர்தருமைந்தன், செங்கமலம்புரைசேறடிதன்னைத்
தங்கண்முடிக்கொடுதாழ்ந்தனர்நின்றே, யிங்கிவைகேட்கவெனுமொழிகூற்றார். ()

வே று.

மன்னவனின்றுபோய்மலைந்துமீண்டபி, னென்னலன்மாட்டுறுமுலப்பில்பூதர்க ளிந்நகர்வடாதுசாரெய்திக்காவலோன், றன்னுயிர்கொண்டனர்தானைசிந்தினர். ()

தகுவர்தமாப்படைதலையழிந்தபி, னகலிருவிசும்பளந்தாண்டுநின்றிடு
சிகரியைக்கீண்டுதஞ்செங்கையாலெடா, வெகுளியொடளக்கரின்மீதுவீசினர். ()

நீடியசிகரிபோய்நேமிபுக்கபின், மாடுறுவடபுலமதிலைமுற்றவுஞ்
சாடினர்மீண்டனர்தலைவவிந்நகர், கோடிலதாங்கடற்குட்டம்போன்றதே. (௪கக)

என்றலும்வினவியேயேந்தறன்புடை, சென்றிடும்வயவரிற்சிலரைநோக்கியே, வன்றிறலுடையநம்மரபிற்றச்சனை, யொன்றொருகணத்தின்முன்னுய்த்திரென்னவே.()

ஆயவர்விரைந்துபோயவுணத்தச்சனை, மேயினரிறைமகன்விளித்துளானெனக், கூயினர்வருகெனக்கொடுவந்துய்த்தனர், மாயிருங்கதிரைமுன்வெகுண்டமைந்தன்முன். (௪கரு.)

தன்னடிவணங்கியேதச்சனிற்றலு, மன்னவர்மன்னவன்மதலைவல்லைநீ, யிந்நகர்வடமதில்சிகரியேனவுந், தொன்னெறியமைக்கெனச்சொற்றுத்தூண்டினான். (௪க௪)

எல்லைமற்றன்னதினெல்லைதன்பகைக், கல்லுயர்மொய்ம்பன்மாகாயனென்ப தோர், வல்லவுணன்றனைவருதியென்றுகூ, யொல்லையினினையதொன்றுரைத்தன் மேயினன். (சுகரு)

சேயுயர்வடமதிற்சிகரிதன்னிடைப், போயினையங்கெறிபுரத்தியாலெனு வாயிரப்பத்தெனுமனிகவெள்ளமோ, டேயினன்றானுறுமிருக்கையெய்தினன். ()

அத்துணையேகியேயவுணர்கம்மிய, னுத்தரநெடுமதிலோங்குகோபுரஞ் சித்திரவுறுப்பொடுசித்தத்துன்னியே, வித்தகவன்மையால்விதித்துப்போகவே. ()

அடுசிபுரவிதேரவுணர்தானையாங், கடலுடன்சென்றுமாகாயனென்பவன் வடமதிற்சிகரியின்வாய்தல்போற்றியே, சுடர்கெழுதீபிகைசுற்றவைகினன்.(சுகஅ)

ஆயதுநிகழ்வுழியாழிவெற்பின்வாய், ஞாயிறுநணுகநள்ளிருளின்யாமினி போயதுமெய்ப்புலன்புந்திசேர்வுழி, மாயையதகன்றிடும்வண்ணமென்னவே. ()

கங்குலென்றுரைபெறுகடவுட்கற்புடை, நங்கையைமேவுவானயப்புமேற்கொளா, வங்கவளைத்தொடர்ந்தணுகுவானெனச், செங்கதிரண்ணல்கீழ்த்திசையிலெய்தினன். (சுஉ0)

இரண்டாநாட்சூரபன்மன்யுத்தப்படலமுற்றிற்று.

ஆகூ திருவிருத்தம் - அளஎ.

## மூன்றாநாட்பானுகோபன்யுத்தப்படலம்.

இரவிவந்தற்றுழியெழுந்துசூர்மகன், மரபுளிநாட்கடன்வழாமலாற்றியே, செருவினிலுடைந்திடுசிறுமைசிந்தியாப், பொருவருமாயையைப்போற்றன்மேயினன். (க)

போற்றினன்முன்னுறுபொழுதின்மாயவள், கோற்றொழில்கன்றியகுமரன்முன்னரே, தோற்றினணிற்றலுந்தொழுதகையினன், பேற்றினைமுன்னியேயினையபேசுவான். (உ)

தாதைதனவைவைகேள்சண்முகத்தவன், றூதுவனொடுபோர்த்தொழிலையாற்றினேனேதமின்மானமுமிழந்துசாலவு, நோதகவுழந்தனனென்மைநீங்கினேன். (௩)

துன்னலரோடுபோர்தொடங்கியீற்றினிற், பின்னிடுவார்பெறும்பிழையும்பெற்றனை, னென்னினிவரும்பழியிதற்குமேலென்று, னன்னதுமாயைகேட்டறைதன்மேயினள். (ச)

மறைநெறிவிலக்கினைவானுளோர்தமைச், சிறையிடைவைத்தனைதேவர்கோமகன் முறையினையழித்தனைமுனிவர்செய்தவங்,குறையுறவித்தனைகொடுமைபேணினாய்

ஓவருந்தன்மையாலுயிர்கள்போற்றிடு, மூவரும்பகையெனின்முனிவர்தமொடு, தேவரும்பகையெனிற்சேணிலுற்றுளோ, ரேவரும்பகையெனினெங்ஙன்வாழ்தியால். (சு)

பிழைத்திடுகொடுநெறிபெரிதுஞ்செய்தலாற், பழித்திறம்பூண்டனைபகைவரிங்ஙனமழித்தமரியற்றிடவவர்க்குத்தோற்றனை, யிழைத்திடும்விதியினையாவர்நீங்கினர். ()

நூற்றிவண்பற்பலநுவலினுவதென், மாற்றருந்திறலுடைமன்னன்மைந்தநீ சாற்றுதிவேண்டிய்தருவனென்றலு, மாற்றவுமகிழ்சிறந்தனையன்கூறுவான். (அ)

நின்றமரியற்றியேநென்னலென்றனை, வென்றனனேகியவீரவாகுவை
யின்றனிகத்தொடுமீறுசெய்திட, வொன்றொருபடையினையுதவுவாயென்றான். (௧)

அடல்வலிபிழைத்திடுமெவுணன்சொற்றன, கெடலருமாயவள்கேட்டுத்தன்னொரு
படையினைவிதித்தவன்பாணிநல்கியே, கடிதினிலொருமொழிகழறன்மேயினாள். ()

மற்றிதுவிடுத்தியான்மறையிற்கர்தவே, னொற்றனைப்பிறர்தமையுணர்வைவீட்டியே
சுற்றிடும்வாயுவின்றொழிலுஞ்செய்யுமா, விற்றையிற்சயமுனதேகுவாயென்றாள். ()

உரைத்திவைமாயவளும்பர்போந்துழி, வரத்தினிற்கொண்டிடுமாயமாப்படை
பரித்தவனொருநவிற்பழியைநீங்கியே, பெருத்திடும்பெருமிதப்பெற்றிகூடினான். ()

கூர்ப்புறுபல்லவங்கொண்டதூணியைச், சீர்ப்புறத்திறுக்கிமெய்செறித்துச்சா
லிகை, கார்ப்பெருங்கொடுமரங்கரங்கொண்டின்னதோர், போர்ப்பெருங்கருவிகள்
புனைந்துதோன்றினான். (௧௩)

காற்படையழற்படைகாலன்றொல்படை, பாற்படுமதிப்படைபரிதியோன்படை
மாற்படையரன்படைமலரயன்படை, மேற்படுசூர்மகனெடுத்தன்மேயினான். (௧௪)

மேனவப்படைமதில்விரவுசாலையுள், வானவப்படைகொடுவாய்தல்போந்தன
னானவப்படைதருமாடல்வில்லினான், றானவப்படைஞர்கடொழுதுதாழ்ந்திட. ()

சயந்தனைப்பொருதிடுந்தார்பெய்தோளினான், சயந்தனைப்பொருதநாட்சமரிற்
கொண்டதோர், சயந்தனத்தேறினன்றகுவர்யாவருஞ், சயந்தனைப்பெறுகெனவா
சிசாற்றவே. (௧௬)

ஒப்பறுசெறுநர்மேலுருத்துப்போர்செயத், துப்புறுசூர்மகன்றொடர்கின்றானெனச்
செப்புறுமொற்றர்கடெரிந்துபோமென, வெப்புறத்தானையுமெழுந்துபோந்தவே. ()

பரிபதினாயிரவெள்ளம்பாய்மத, கரிபதினாயிரவெள்ளங்காமர்தே
ரொருபதினாயிரவெள்ளமொப்பிலா, விருபதினாயிரவெள்ளமேனையோர். (௧௮)

நாற்படையிவ்வகைநடந்துகோமகன், பாற்படவிரவினபரவுபூழிகண்
மாற்படுபுணரிநீர்வறப்பச்சூழ்ந்ததான், மேற்படுமுகிலினமிசையவந்தென. (௧௯)

திண்டிறலனிகமீச்சென்றபூழிகண், மண்டலமுழுவதும்வரைகள்யாவையு
மண்டமும்விழுங்கியேயவைகளற்றிட, வுண்டலினடைத்தனவுவரிமுற்றுமே. (௨௦)

முரசொடுதுடிகுடமுழவஞ்சல்லரி, கரடிகைதண்ணுமையுடுக்கைகாகள
மிரலைகளாதியாமியங்களார்த்தன, திருநகரழியுமென்றரற்றுஞ்செய்கைபோல். ()

* உழையுடைக்கற்பினருரையிற்சென்றிடா, தழையுடைப்பிடிக்குநேர்தணிக்கும்
வேட்கையாற், புழையுடைத்தனிக்கரம்போக்கிப்பொங்குசூன், மழையுடைத்திடு
வனமதங்கொள்யானையே. (௨௨)

கார்மிசைப்பாய்வனகதிரவன்றனித், தேர்மிசைப்பாய்வனசிலையிற்பாய்வன
பார்மிசைப்பாய்வனபாரிடத்தவர், போர்மிசைப்பாய்வனபுரவிவெள்ளமே. (௨௩)

அருளிலராகியவவுணர்மாண்டுழித், தெருளுறுமவ்வவர்தெரிவைமாதர்கண்
மருளொடுதுன்புறும்வண்ணங்காட்டல்போ, லுருளுவவிரங்குவவுலப்பிறேர்களே.

கரிந்திடுமேனியுங்கனிப்பிறானவர், தெரிந்திடுமாலைசூழ்செய்யபங்கியும்
விரிந்திடுநஞ்சுபல்லுருவமேவுறீஇ, யெரிந்திடுமங்கிகொன்றென்னத்தோன்றுமே. ()

வேறு.

பொங்குவெங்கதிர்போன்றொளிர்பூணினர், திங்கள்வாளெயிற்றார்முடிசெய்யவர்
துங்கவற்புதர்பொன்புகர்தூங்குவே, லங்கையாளரசனியினார்த்துளார். (௨௬)

நீளமர்க்குநெருநலிற்போந்துபின், மீளுதற்குடைந்தார்தமைவிட்டுநும்
வாளினுக்கிரையாவென்றுவாய்மையாற், சூளிசைத்துத்தொடர்ந்தனர்வீரரே. ()

ஓடுதேரினுவாக்களின்மானவர், நீடுகையினிவந்துறுகேதன
மாடிவிண்ணையளாவுவதாருவைக், கூடவேகொல்கொடியெனுந்தன்மையால். ()

கோலினோங்குகொடியுங்கவிகையுந், தோலுமீண்டலிற்சூழிருளாயின
மாலைசூழ்குஞ்சிமானவர்வன்கையில், வேலும்வாளும்பிறவும்வில்வீசுமே. (௨௯)

இன்னதன்மையியன்றிடத்தானைக, டென்னுபாங்கரிற்சூழ்ந்துபடர்ந்திட
மன்னன்மாமகன்மாநகர்நீங்கியே, பொன்னவாம்புரிசைப்புறம்போயினான். (௩0)

போயகாலைப்புறந்தனில்வந்திடும், வேயினோர்களின்வெம்பரிமாமுக
மாயிரங்கொளவுணனைநோக்கியே, தீயசூர்மகனின்னனசெப்புவான். (௩௧)

ஈசன்விட்டகுமரனிருந்திடும், பாசறைக்களந்தன்னிற்படர்ந்துநீ
மாசிலாவிறல்வாகுவைக்கண்ணுறீஇப், பேசலாற்றுதியின்னனபெற்றியே. (௩௨)

மன்னனாணையின்மண்டமராற்றியே, தன்னையின்றுதடிந்திசைபெற்றிட
வுன்னிவந்தனனெல்லையினேகுதி, முன்னைவைகலிற்போரென்றுமுன்னலாய். ()

என்றமாற்றமெனதுரையாகவே, வென்றியோடுபுகன்றனைமீள்கென
நின்றதூதனைநீசன்விடுத்தலு, நன்றிதென்றுநடந்துமுன்போயினான். (௩௪)

ஏமகூடமெனப்பெயராகிய, காமர்பாசறைக்கண்ணகன்வைப்புறீஇ
நாமவேற்படைநம்பிக்கிளவலாந், தாமமார்பனைக்கண்டிவைசாற்றுவான். (௩௫)

எல்லைதன்னையிருஞ்சிறைவீட்டிய, மல்லலங்கழன்மன்னவன்மாமக
னெல்லையிப்பகலுன்னுயிர்மாற்றுவான், செல்லுகின்றனன்செப்பியசூளினான். ()

ஏவினானெனையித்திறங்கூறியே, கூவிநின்னைக்கொடுவருவாயென
மேவலாளவிரைந்தயர்க்கேகுதி, நாவலோயெனவேகவின்றானரோ. (௩௭)

தூதனிவ்வகைசொற்றெதிர்நிற்றலு, மூதகுந்திறன்மொய்ம்பனகைத்தியா
னாதவன்பகையாருமிருண்டிடப், போதுகின்றனன்போய்ப்புகல்வாயென்றான். ()

ஒற்றனித்திறமோர்ந்துடன்மீடலுஞ், செற்றமிக்கதிறல்கெழுமொய்ம்பினான்
சுற்றமோடுதலைவர்கள்சூழ்ந்திடக், கொற்றவேற்கைக்குமரன்முனண்ணினான். ()

எங்குமாகியிருந்திடுநாயகன், பங்கயப்பொற்பதத்தினைத்தாழ்ந்தெழீஇச்
செங்கைகூப்பிமுன்னிற்றலுஞ்செவ்வியோ, னங்கணுற்றதறிந்திவைகூறுவான். ()

நென்னலோடுநிருதன்றனிமக, னுன்னைமுன்னியுரனொடுபோந்துளான்
றுன்னுதானைத்துணைவர்கடம்மொடு, முன்னைவைகலினேகுதிமொய்ம்பினோய். ()

போயெதிர்ந்துபொருதிபடைகளா, யேயவற்றிற்கெதிரெதிர்தூண்டுதி
மாயைவஞ்சன்புரிந்திடின்வந்துநந், தூயவேற்படைதுண்ணெனநீக்குமால். (௪௨)

போதியென்றுபுகன்றிடவப்பணி, மீதுகொண்டுவிடைகொண்டுபுங்கவன்
பாதம்வந்தனைசெய்துபடர்ந்தனன், றூதுபோயமராற்றியதொன்மையோன். (௪௩)

துணையுளார்களுஞ்சுற்றமுள்ளார்களுங், கணவர்தங்களிற்காவலர்யாவரு
மணிகொடேர்புகவாடலந்தோளினா, னிணையிலாத்தன்னிரதத்திலேறினான். (௪௪)

ஏறுமெல்லையிலிச்செயனோக்கியே, யூறில்பூதரொராயிரவெள்ளமு
மாறிலாதவரையுமரங்களும், பாறுலாவுபடையுங்கொண்டெய்தினர். (சஎ)

சாரதங்கெழுதானைகளீண்டியே, காரினங்களிற்கல்லெனவார்ப்புற
வீரமொய்ம்பின்விடலையைச்சூழ்ந்தன, ராரும்விண்ணவராசிபுகன்றிட. (சஅ)

மேனகாலைவிசயங்கொண்மொய்ம்பினன், ஞானையானவுந்தப்பியர்யாவரு
மேனையோர்களுநீண்டச்சென்றெய்தினன், பானுகோபன்படரும்பறந்தலை. (சஎ)

வேறு.

தேர்த்திடும்பாரிடஞ்செறியும்வெள்ளமுங், கார்த்திடுதானவக்கடலுமேர்புறீஇ
யார்த்தனரிகலினராற்றல்கூறியே, போர்த்தொழின்முறையினைப்புரிதன்மேயினர்.

கோடுகண்முழங்கினகுறுங்கணருளி, பீடுறவிரட்டினபேரியார்த்தன
மூடினவலகைகண்மொய்த்தபுள்ளின, மாடினவெனுமமரர்நோக்கவே. (சஅ)

இலையயிரேமரமெழுத்தண்டொண்மழு, வலமொடுவச்சிரமாழிமாப்படை
தொலைவறுமுத்தலைச்சூலமாதிய, சிலைபொதிகணையுடனவுணர்சிர்தினர். (ருo)

முத்தலைக்கழுவொடுமுசலம்வெங்கதை, கைத்தலத்திருந்திடுகணிச்சிநேமிகண்
மைத்தலைப்பருப்பதமரங்களாதிய, வத்தலைப்பூதருமார்த்துவீசினர். (ருக)

பணிச்சுடர்வாளிணற்பாணிசென்னிதோ, டணித்தனர்குற்றினர்சரிலையாதியாற்,கு
ணிப்பறுமெழுக்கதைகொண்டுதாக்கினர், கணப்படையொடுபொருபவுணர்காளையர்

பிடித்தனரவுணரைப்பிறங்குகைகளா, லடித்தனர்கிழித்தனரணியகந்தர
மொடித்தனர்மிதித்தனருருட்டுகின்றனர், புடைத்தனரெழுக்களாற்பூதவீரரே. ()

வாசியும்வயவருமாயச்சாரத, ராசறுகரங்களாலள்ளியள்ளியே
காய்சினவிபங்களிற்கணிப்பிறேர்களில், வீசினின்றெற்றினரவையும்வீழவே. (ரு)

ஓதவெங்கடல்களுமூழிவன்னியு, மேதகுவலிகொடுவெகுளிவீங்கியே
யாதியின்மாறுகொண்டமர்செய்தாலெனப், பூதருமவுணரும்பொருதிட்டாரரோ.()

குழங்கியவவுணருங்கொடியபூதருங், கழகெனுமுறைபெறுகளத்திற்போர்செய, வொ
ழுகியசோரியாறுானவேட்டலாய், முழுகியகரண்டம்வின்பொய்த்தபுள்ளொலாம்.()

துணிந்தனகைத்தலந்துணிந்ததோட்டுணை, துணிந்தனசென்னிகடுணிந்தவாலுரந்
துணிந்தனகழலடிதுணிந்தமெய்யெலாந், துணிந்தனவலிசிலபூதர்துஞ்சினர். (ருஎ)

முடித்தொகையற்றனர்மொய்ம்புமற்றன, ரடித்துணையற்றனரங்கையற்றனர்
வடித்திடுகற்பொடுவலியுமற்றனர், துடித்தனரவுணருமநேகர்துஞ்சினர். (ரு)

வசையுறுமவுணரின்மன்னர்யாவரு, மிசைபெறுபூதரினிறைவருஞ்செழீஇத்
திசையொடுதிசையெதிர்செய்கைபோலவே, யசைவிலராகிநின்றமமராற்றினர். ()

மால்கிளர்தியவர்மலைகொள்சென்னியைக், கால்கொடுதள்ளினர்களேவரந்தனைப்
பால்கிளர்பிலத்திநுட்படுத்துச்சென்றனர், தோல்களையுரித்தனர்குலபாணிபோல்.

அரித்திறலடக்கினரவுணவீரர்தம், வரத்தினையொழித்தனர்மாயநூறியே
புரத்தினையழித்தனர்போரின்மாதொடு, நிருத்தமதியற்றினர்நிமலன்போலவே. ()

கங்குலின்மேனியராழிக்கையினர், துங்கமொடவுணரைத்தொலைத்துத்தண்
ணெனச், சங்கமதிசைத்தனர்தண்டந்தாங்குவார், செங்கண்மால்பொருவினர்சில
வெம்பூதரே. (கூஉ)

அயர்ப்புறுமால்கரியரற்றவேகலாய்க், குயிற்றியமணிநெடுங்கோடுவாங்குவா
ருயற்படுகற்பமங்கொன்றிலேனத்தி, னெயிற்றினைப்பறித்திடுங்குமரனென்னவே.

கொலைபயில்கரிமுகங்கொண்டபூதர்தம், மலையிடைமறைந்தனர்மறித்துந்தோன்றி
யே, யலமருசமர்புரிந்தவுணவீரரிற், சிலர்சிலர்தாரகன்செயற்கைமேயினார். ()

மாலொடுபொருதனர்மலரயன்றனைச், சாலவும்வருத்தினர்சலதிவேலையின்
பாலர்களவுணரிற்பலர்சலந்தரன், போலுடல்கிழிந்தனர்பூதர்நேமியால். (௬௫)

போன்றவர்பிறரிலாப்பூதநாயகர், மூன்றிலைப்படைகளின்மூழ்கித்தீமைபோய்
வான்றிகழ்கதியும்வாலுணர்வுமெய்தியே, தோன்றினரந்தகாசுரனைப்போற்சிலர். ()

வேறு.

இலக்கவீரருமெண்மருமத்துணை, விலக்கில்வில்லுமிழ்வெங்கணைமாரிதூ
யொலிக்கொள்சூறையினொல்லையிற்சுற்றியே, கலக்கினார்களவுணக்கடலினை. (௬௭)

வேறு.

மிடைந்தகணவீரர்களுமேலவருமாக
வடைந்தமரியற்றியவுணப்படைகண்மாயத்
தடிந்தனரொழிந்தனதடம்புனல்குடங்க
ருடைந்தவழிசிந்தியெனவோடியனவன்றே. (௬௮)

ஓடியதுகண்டனனுயிர்த்துநகைசெய்தான்
காடுகிளர்வன்னியெனவேகனலுகின்றா
னாடல்செயமுன்னியொரடற்சிலையெடுத்தான்
றோடுசெறிவாகைபுனைசூரனருண்மைந்தன். (௬௯)

வாகுபெறுதேர்வலவனைக்கடிதுநோக்கி
யேகவிடுகென்றிரவிதன்பகையியம்பப்
பாகனினிதென்றுபரிபூண்டவிரதத்தை
வேகமொடுபூதர்படைமீதுசெலவிட்டான். (௭௦)

பாரிடர்கள்சேனையிடைபானுவைமுனிந்தோன்
சேருதலுமாங்கதுதெரிந்துதிறல்வாகு
சாருறுபெருந்துணைவர்தம்மொடுவிரைந்தே
நேரெதிர்புகுந்தொருநெடுஞ்சிலையெடுத்தான். (௭௧)

எடுத்திடும்வில்வீரனையெதிர்ந்தவுணன்மைந்தன்
வடித்திடுதடக்கைதனில்வார்சிலைவளைத்துத்
தடித்தனகுணத்தொலிதனைப்புரியவண்டம்
வெடித்தனமுடித்தலைதுளக்கினர்கள்விண்ணோர். (௭௨)

எண்ணில்பலகோடியுருமேறுருவமொன்றாய்
வண்ணமிகுமின்னிடைமறைந்தொலிசெய்தென்ன
விண்ணுறநிவந்தவியன்மொய்ம்புடையவீர
னண்ணலர்துணுக்கமுறநாணிசையெடுத்தான். (௭௩)

நாணொலிசெவித்துணையினஞ்சமெனவெய்தத்
தூணிகளும்வாகுடையசூர்மதலைசீறி
வாணிலவுகான்றபிறைவாளியுலவாமற்
சேணுநிலனுந்திசைகளுஞ்செறியவிட்டான். (௭௪)

மாமுருகவேளினவன்மற்றதுதெரிந்தே
தூமர்பிறைபோன்றுகதிரென்னவெயில்கான்று
தீமுகமதாமனவில்செய்யசரமாரி
தூமுகிலினாணமுறவேகெடிதுதூர்த்தான். (௭௫)

ஐயன்விடுவெஞ்சரமுமாதவனுமஞ்சம்
வெய்யன்விடுவெஞ்சரமுமேவியெதிர்கவ்வி
மொய்யுடையராவினமுனிந்திகலிவெம்போர்
செய்வதெனமாறுகொடுசிந்துவனதம்மில். (௭௬)

வேறு.

கரிந்திடுமாமுகில்கடந்தனவானவர், புரிந்திடுசேணெறிபுகுந்தனமாலய
னிருந்திடுமூரையுமிகந்தனபோயின, திரிந்தனசாரிகைசிறந்தவர்தேர்களே. (௭௭)

தெண்டிரைநேமிகள்சென்றனசூழ்வன, வெண்டிசைமாநகரெங்கணுமேகுவ
மண்டலமால்வரைமண்டியுலாவுவ, வண்டமுலாவுவவங்கவர்தேர்களே. (௭௮)

மங்குலின்மேலதோமண்டலமார்வதோ, செங்கணனூரதோதெண்டிரைசேர்
வதோ, விங்குளரேறுதேரெங்குளவோவெனச், சங்கையினோடினர்தங்களில்வானு
ளோர். (௭௯)

மன்னியமாமுகில்வண்ணமதாயின, ரன்னதொல்வீரர்களன்பியதேரவை
மின்னுவின்மேவுவவெம்மையில்வீசிய, துன்னியவாளிகடொன்மழைபோல்வவே

ஆங்கவர்தேர்களிலாண்டுறுபாகர்க, ளேங்கலில்வாசிகணீண்டியமேலவர்
தீங்கதிர்வாளிகள்சேண்புடைசூழ்வுற, வேங்கினரோடினரீண்டியவானுளோர். ()

வேறு.

பூசலிவ்வகைபுரிந்திடுகின்றுழிப்புரைதீர்
வாசவன்மகன்றனைச்சிறைசெய்திடும்வலியோ
னாசுகங்களிலாசுகமாயிரந்தூண்டி
யீசன்மாமகன்சேனைநாயகனிறதெய்தான். (௮௨)

ஆகமீதிலோராயிரம்பகழிபுக்கழுந்த
வேகவீரனுமிளவலுமுனிவுகொண்டேவி
வாகைவெங்கணைபத்துநூறவுணர்கோன்மதலை
பாகுமாக்களுமிரதமுமொருங்குறப்படுத்தான். (௮௩)

படுக்கவெய்யவன்வேறொருவையமேற்பாய்ந்து
தடக்கைவில்லினைவளைக்குமுனாயிரஞ்சரத்தைத்
தொடுக்கமற்றவனுரந்தனைப்போழ்தலுந்துளங்கி
யிடுக்கணெய்தினனார்த்தனர்பூதர்களெவரும். (௮௪)

பூதரார்த்திடுதுழனியைக்கேட்டலும்பொருமிக்
காதில்வெவ்விடமுய்த்திடுதிறனெனக்கனன்றே
யேதமில்லதோர்பண்ணவப்படைகளாலிமைப்பிற்
றூதனூற்றலைத்தொலைக்குவன்யானெனத்துணிந்தான். (௮௫)

இணையில்சூர்மகன்வாருணப்படைக்கலமெடுத்துப்
பணிவுகொண்டகார்முகந்தனிற்பூட்டிநீபடர்ந்து
கணிதமில்லதோர்நீத்தமாய்ச்சாரதர்கணத்தைத்
துணைவர்தங்களைத்தூதனைமுடிக்கெனத்தொடுத்தான். (௮௬)

தொடைப்பெரும்படைகடைமுறையுலகெலாந்தொலைக்கு
மடற்பெருங்கடலேழினும்பரந்துபோயான்று
தடப்பெரும்புனனீத்தமாய்விசும்பினைத்தடவி
யிடிப்பெருங்குரல்காட்டியேயேகியதிமைப்பில். (அஎ)

கண்டவானவர்துளங்கினர்பூதருங்கலக்கங்
கொண்டுநின்றனருணர்ந்திலர்துணைவருங்குலந்தா
ரண்டர்நாயகற்கிளையவனேக்கியேயகில
முண்டுலாவருமங்கிமாப்பெரும்படையுய்த்தான். (அஅ)

புகையெழுந்தனவெம்மையுமெழுந்தனபுலிங்கத்
தொகையெழுந்தனஞெகிழிகளெழுந்தனசுடரின்
வகையெழுந்தனபேரொலியெழுந்தனவன்னிச்
சிகையெழுந்தனசெறிந்தனவானமுந்திசையும். (அகூ)

முடிக்கலுற்றதீப்பெரும்படைசெறியமூதண்டம்
வெடிக்கலுற்றனவற்றினகங்கைமீன்றெருகுதி
துடிக்கலுற்றனசுருங்கினவளக்கர்தொல்கிரிகள்
பொடிக்கலுற்றனதளர்ந்துமெய்பிளந்தனள்புவியும். (கூ0)

தீர்த்தனேவலோன்விடுபடையின்னணஞ்சென்று
மூர்த்தமொன்றினில்வாருணப்படையினைமுருக்கி
நீர்த்திரைப்பெருநீத்தமுமுண்டுமேனிமிர்ந்து
போர்த்ததாமெனச்சுற்றியதவுணர்கோன்புறத்தில். (கூக)

சுற்றுகின்றவப்படையினைக்கண்டுசூர்புதல்வன்
செற்றமேற்கொண்டுமாருதப்பெரும்படைசெலுத்த
மற்றதூழிவெங்காலுருக்கொண்டுமன்னுயிர்கண்
முற்றுமண்டமுந்துளங்குறச்சென்றதுமுழங்கி. (கூஉ)

மாருதப்படைசென்றுதீப்படையினைமாற்றிச்
சாரதப்படைமேலடவருதலுந்தடந்தோள்
வீரன்மற்றதுகண்டுவெம்பணிப்படைவிடுத்தான்
சூரியத்தனிக்கடவுளுந்தன்னுளந்துளங்க. (கூங)

ஆயிரம்பதினாயிரமிலக்கமோடநந்தந்
தீயபஃறலைப்பன்னகத்தொகுதியாய்ச்செறிந்து
காயமெங்கணுநிமிர்ந்துசெந்திவிடங்கான்று
பாயிருஞ்சுடர்க்கதிரையுமறைத்ததுபடத்தால். (கூச)

வெங்கணாகங்களுமிழ்கின்றவங்கியும்விடமு
மங்குல்வானமுந்திசைகளுமாநிலவரைப்பு
மெங்குமீண்டியவிரவினிற்புவியுளோர்யாண்டும்
பொங்குதீச்சுடரளப்பிலமாட்டுதல்போல. (கூரு)

உலவைமாப்படையுண்டிமெங்கியையொருங்கே
வலவைநீர்மையாற்றம்முழைவரும்படிவாங்கி
யலகில்வெம்பணிவிடுத்தெனவன்னவையுமிழ்தீக்
குலவுகின்றனபுகையெனக்கொடுவிடங்குழும. (கூசா)

இனையகொள்கையாற்பன்னகப்பெரும்படையேகி
முனையெதிர்ந்திடுமாருதப்படையினைமுனிந்து
துனையவுண்டுதன்மீமிசைச்சேறலுந்தொன்றுட்
கனலியைத்தலைபூட்டியகண்டகன்கண்டான். (௯௭)

இன்னதேயிதற்கெதிரெனவவுணர்கோனெண்ணிப்
பொன்னிருஞ்சிறைக்கலுழன்மாப்படையினைப்போக்க
வன்னதேகலும்வெருவியேயாற்றலின்றுகிப்
பன்னகப்படையிரிந்ததுகதிர்கண்டபனிபோல். (௯௮)

ஆலவெம்பணிப்படைமுரிந்திடுதலுமார்த்துக்
காலவேகத்தினுவணமாப்பெரும்படைகலுழன்
கோலமெண்ணிலபுரிந்துநேர்வந்திடக்குரிசின்
மேலைநந்தியந்தேவன்மாப்படையினைவிடுத்தான். (௯௯)

சீற்றமாயண்ணனந்திதன்பெரும்படைசெலுத்த
நூற்றுநூறுநூறாயிரகோடிநோன்கழற்கா
லேற்றின்மேனிகொண்டுலகெலாமொருங்குறவீண்டி
யாற்றவெய்துயிர்த்தார்த்ததுமூதண்டமதிர. (௧௦௦)

களனெனப்படுநூபுரங்கழலிடைகலிப்ப
வளவில்கிங்கிணித்தாமங்கள்கந்தரத்தார்ப்ப
வொளிறுபேரிமிலண்டகோளகையினையுரிஞ்ச
வளருநீண்மருப்புலகெலாமலைப்பவந்ததுவே. (௧௦௧)

திரையெறிந்திடுமளக்கருண்டலவுசேண்முகிலி
னிரையெறிந்ததுபரிதிதேரெறிந்ததுநெடிதாந்
தரையெறிந்ததுதிசைக்கரியெறிந்ததுதடம்பொன்
வரையெறிந்ததுகுலகிரியெறிந்ததுமருப்பால். (௧௦௨)

நந்திமாப்படையின்னணமேகியேநணுகி
வந்தகாருடப்படையினைவிழுங்கிமாற்றலனைச்
சிந்துகின்றனனென்றுசென்றிடுதலுந்தெரியா
வந்தகன்படைதொடுத்தனனவுணர்கட்கரசன். (௧௦௩)

தொடுத்தவந்தகப்படையையும்விடைப்படைதுரந்து
படுத்துவீட்டியதன்னதன்மிடலினைப்பாரா
கடித்துமெல்லிதழதுக்கியேயயன்படைக்கலத்தை
யெடுத்துவீசினனிந்திரன்பதிகனற்கிந்தோன். (௧௦௪)

வீசுநான்முகப்படைக்கலம்வெருண்டுவிண்ணெறிபோ
யீசனூர்திதன்படையினைக்காண்டலுமிடைந்து
நீசனேவலின்வந்தனனின்வரவுணரேன்
காய்சினங்கொளேலெனத்தொழுதுடைந்ததுகடிதின். (௧௦௫)

நான்முகத்தினில்விதித்திடுநூற்றிதழிருக்கை
நான்முகப்படைபழுதுபட்டோடலுநகைத்து
வான்முகத்தவரார்த்தனரதுகண்டுமைந்தன்
சூன்முகக்கொண்டன்மேனியன்பெரும்படைதொடுத்தான். (௧௦௬)

ஊழிநாளினுமுடிவிலாதவன்மகனுந்து
மாழியான்படையாண்மொளுருவமாயமைந்து
கேழிலம்படைதாங்கிமாய்த்தொடுங்கெழுமி
வாழிநந்திதன்படையெதிர்மலைந்ததுமன்னே. (க0எ)

நாரணன்படைநந்திதன்படைக்கெதிர்நணுகிப்
போரியற்றியேநிற்புழியதுகண்டுபுனிதன்
சூரரித்திறல்சிந்திடச்சிம்புளாய்த்தோன்றும்
வீரபத்திரப்படையினைத்தொழுதனன்விடுத்தான். (க0அ)

ஏயதாகியவீரபத்திரப்படையெழுந்து
போயகாலையினந்திதன்படையெதிர்பொருத
மாயவன்படைதொலைந்ததுமதியொடுதிகழ்மீ
னாயிரங்கதிரோன்வரக்கரந்தவாறதுபோல். (க0கூ)

செங்கணாயகன்படைதொலைந்திடுதலுந்தெரிவா
னங்கணாய்வுறுவிமைப்பினிலகிலமுமழிக்கு
மெங்கணாயகன்படையினைத்தூண்டுதற்கெடுத்தான்
வெங்கணாயிரங்கதிரினைச்செயிர்த்திடும்வெய்யோன். (கக0)

எஞ்சலில்லதோரெம்பிரான்றொல்படையெடுத்து
மஞ்சனங்கந்தந்தூபிகைமணிவிளக்கமுத
னெஞ்சினிற்கடிதுய்த்தனன்பூசனைநிரப்பி
விஞ்சுமன்பினால்வழுத்தியேதொழுதனன்விடுத்தான். (ககக)

தாதையாயவன்படைக்கலம்விடுத்திடுந்தன்மை
காதன்மாமகன்கண்டனன்றானுமக்கணத்தி
லாதிநாயகன்படைதனையெடுத்தனனளியாற்
போதநீடுதன்புந்தியாலருச்சனைபுரிந்தான். (ககஉ)

வழிபடுந்தொழின்முற்றியபின்னுறமதலை
யழிதகன்மகன்விடுத்திடுபடைக்குமாறாகி
விழுமிதாயிவண்மீளுதியாலெனவேண்டித்
தொழுதியாவர்க்குமேலவன்படையினைத்தொடுத்தான். (ககங)

தூயன்விட்டிடுசிவன்படையெழுதலுந்தொல்லைத்
தீயன்விட்டிடுபரன்படையெதிர்ந்துநேர்சென்ற
தாயவப்படையிரண்டுமொன்றாகியவழிக்கு
நாயகத்தனியுருத்திரவடிவமாய்நண்ணி. (ககச)

ஊழிக்காலினையொருபுடையுமிழ்ந்தனவுலவாச்
சூழிப்பாய்புகையொருபுடையுமிழ்ந்தனதொலைக்கும்
பாழிப்பேரழலொருபுடையுமிழ்ந்தனபலவா
மாழித்தீவிடமொருபுடையுமிழ்ந்தனவவையே. (கக௫)

கூளிமேலவர்தொகையினையளித்தனகொடிதாங்
காளிமேலவர்தொகையினையளித்தனகடுங்கண்
ணாளிமேலவர்தொகையினையளித்தனநவைதீ
ராளிமேலவர்தொகையினையளித்தனவயவில். (ககசு)

நின்றதேவர்நிமலனைநோக்கியே, யுன்றன்முன்னமுவருளர்யாவரு
மின்றதொட்டெமைப்போலிப்பணிமுறை, நன்றுசெய்திடநல்லருள்செய்கென.()

கடனிறத்துக்கயமுகனத்திற, கடைபெறும்படிநல்கியமரர்கோ
னெடியமாலயனின்றுளருக்கெலாம், விடைபுரிந்துவிடுத்தனனென்பவே. (௧௪)

அம்புயக்கணரியயன்வாசவ, னும்பரவ்வரையொல்லையினீங்குறாத்
தம்பதந்தொறுஞ்சார்ந்தனர்வைகினர், தும்பியின்முகத்தோன்றலருளினால். (௧௫)

மூந்தைவேதமுதலெழுத்தாகிய, வெந்தைதோற்றமியம்பினமிங்கினி
யந்தமில்குணத்தாண்டகைக்கோர்குணம், வந்ததென்னென்றிமற்றதுகேட்டிநீ. ()

வேறு.

நற்குணமுடையநல்லோருநாடொணுச், சிற்குணனுமச்சிவன்பராபரன், சொற்
குணமூவகைத்தொடர்புமில்லதோர், நிர்க்குணனவன்செயனிகழ்த்தற்பாலதோ.()

பரவியவுயிர்க்கெலாம்பாசநீக்குவா, னருளினனுகியேயமலன்மாலயற்
கிருதொழின்முறையினையீந்துமற்றவைக், குரியனகுணங்களுமுள்ளவாக்கினன்.()

முடித்திடவியற்றுமெம்முதல்வனத்தொழி, றடப்பரும்வெஞ்சினந்தன்னின்
முற்றுமா, லடுத்தவப்பான்மையாலதன்கட்டாமதம், படுத்தினனத்திறம்பலருந்தே
ர்வரால். (௧௯)

மாமறையளப்பிலவரம்பிலாகமந், தோமறவுதவியோர்தொன்மரத்திடைக்
காமருமுனிவரர்கணங்கட்கன்னவை, தாமதகுணத்தனேற்சாற்றவல்லனோ. (௨0)

வாலியநிமலமாம்வடிவங்கண்ணுதன், மேலவனெய்துமோவேதம்விஞ்சையின்
மூலமென்றவனையேமொழியுமோவிது, சீலமில்லார்க்கெவன்றேற்றும்வண்ணமே.

இமையவர்யாவருமிறைஞ்சுங்கண்ணுதல், விமலனன்றிறுதியைவிளைக்கும்ப
ண்பினுற், றமகுணனென்றியத்தன்மைசெய்கையா, லமைகுணமியற்குணமறியற்
பாலதோ. (௨௨)

சுத்தனுமளித்தனுமியற்றுவோர்க்குள, சாத்திகராசதந்தத்தஞ்செய்கையின்
மாத்திரையல்லதுமற்றவர்க்கவை, பார்த்திடினியற்கையாப்பகரலாகுமோ. (௨௩)

அக்குணமானவையளிக்குஞ்செய்கையாற், றெக்குறுமியற்கையத்தொல்லை
யோர்கள்பா, லிக்குணமல்லதோரிரண்டுஞ்சேருமா,முக்குணநெறிசெனுமுனிவர்
தேவர்போல். (௨௪)

நேமியாற்குருவெனாநீலமாயதுந், தோமறுகடலிடைத்துயில்கொள்பான்மையு
மேமுறுமகந்தையும்பிறவுமெய்துமேற், றூமதராசதந்தானுமுற்றவே. (௨௫)

அறிவொருங்குற்றுழியனையன்கண்ணுத, லிறைவனைவழிபடஇயேத்தியின்னரு
ணெறிவருதன்மையுநீடுபோதமும், பெறுதலிற்சாத்திகமுறையும்பெற்றனான்.௨௬

மேனிபொற்கென்றலின்விமலவூன்பொரு, ளுனெனுமருட்கையினவையிலீசனை
த், தானுணர்தெளிவினிற்றவித்திற்பூசையி, லானதுகுணனெலாமயன்றனக்குமே.

ஆதலின்விருப்புடனல்லதெய்தினோ, ரோதியகுணவிதத்துறுவர்கண்ணுத
னுதனுக்கனையதானுகுருமையாற், பேதைமையொருகுணமவன்கட்பேசுதல். ()

மூன்றெனவுளபொருள்யாவுமுன்னமே, யீன்றவன்கண்ணுதலென்னுநான்மறை
சான்றதுவாகுமாற்றவத்தர்க்கென்னினு, மான்றதோரவன்செயலறியற்பாலதோ.

செங்கண்மான்முதலியதேவரேனையோ, ரங்கவரல்லவையகத்தன்வைகியே
யெங்குமாயாவையுமியற்றநின்றதோர், சங்கரனொருகுணச்சார்பின்மேவுமோ. ()

ஈறுசெய்முறையினையெண்ணித்தாமதக், கூறினரல்லதுகுறிக்கொண்மேலையோர
வேறொருசெய்கையின்விளம்பினாரல, ராறணிசெஞ்சடையமலனுக்கரோ. (௩௧)

வேறு.

என்றிவைபலவுந்தூயோனிசைத்தலுமினையவெல்லாம்
வன்றிறல்வெறுக்கையெய்திமயங்கலாற்றக்கனென்னும்
புன்றொழில்புரியுந்தீயோன்பொறுத்திலன்புந்திமீது
நன்றெனவறிதறேற்றானொருசிலநவிலலுற்றான். (௩௨)

முனிவகேள்பலவுமீண்டுமொழிவதிற்பயனென்வெள்ளிப்
பனிவரையுறையுநங்கோன்பகவனேயெனினுமாக
வனையவன்றனக்குவேள்வியவிதனையுதவேனீயு
மினியிவைமொழியல்போதியென்செயன்முடிப்பனென்றான். (௩௩)

வேறு.

வளங்குலவுதக்கனிதுபுகன்றிடலுந்ததீசிமுனிமனத்திற்சீற்றம்
விளைந்ததுமற்றவவளவில்வெருவியதுவடவையழல்விண்ணோர்நெஞ்சந்
தளர்ந்ததுபொன்மால்வரையுஞ்சலித்ததந்தக்குலகிரியுந்தரிப்பின்றாகி
யுலைந்தனவேலைகளேழுமொடுங்கியனநடுங்கியதிவ்வுலகமெல்லாம். (௩௪)

அக்கணமேமுனிவரன்றன்பெருஞ்சீற்றந்தனைநோக்கியந்தோவென்று
லெக்குவடுமெக்கிரியுமெக்கடலுமெவ்வுலகும்யாவும்யாருந்
தக்கனொருவன்பொருட்டாற்றளர்ந்திடுமோவெனமுனிவுதணிந்துதற்கு
ழொக்கலொடுமவணெழுந்துசிறுவிதியின்முகநோக்கியொன்றுசொல்வான். (௩௫)

சங்கரனைவிலக்கியின்றுபுரிகின்றமகஞ்சிதைகதக்கனின்னோ
டிங்குறையுமமரரெலாமழிவுறவின்னேயென்றுவிசைத்துப்பின்ன
ரங்கணுறுமறையோர்தம்முகநோக்கியந்தணரிலழிதூ * வானீ
ருங்கள்குலத்தலைமைதனையிழந்திட்டீர்கேண்மினெனவுரைக்கலுற்றான். (௩௬)

பேசரியமறைகளெலாம்பராபரனீயெனவணங்கிப்பெரிதுபோற்று
மீசனையுமன்பரையுநீற்றொடுகண்டிகையினையுமிகழ்ந்துநீவிர்
காசினியின்மறையவராயெந்நாளும்பிறந்திறந்துகதியுறாது
பாசமதனிடைப்பட்டுமறையுரையாநெறியதனிற்படுதிரென்றான். (௩௭)

இனையநெறியாற்சாபம்பலவுரைத்துத்ததீசிமுனியிரண்டுபாலு
முனிவர்தொகைதற்சூழத்தானுறையுமாச்சிரமமுன்னிச்சென்றா
னனையவன்றன்பின்னாகத்தக்கனென்போன்பெருந்தகவுமாற்றுநோன்பும்
புனைபுகழுஞ்செழுந்திருவுமாற்றலுமாமனச்செருக்கும்போயிற்றன்றே. (௩௮)

அனந்தன்சாபநீங்குபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧,௨௧0.

# தானப்படலம்

போனதோர்பொழுதிலவன்றுவசமிற்றமகத்தூணிற்பொருக்கென்றெய்திக்
கானுலாவியகொடியுங்கழுகுமிடைந்தனயாருங்கலங்கத்தானே
மானமார்வேதவல்லிமங்கலநாணுங்கழன்றமற்றித்தன்மை
யானதோர்துன்னிமித்தம்பலவுண்டான்முடிவோன்கணவையுறாவோ. (௧)

* அழிதூ - பேடி.

வேறு.

இந்தவாறுதுன்னிமித்தங்கள்பலநிகழ்ந்திடவுஞ்
சிந்தைசெய்திலன்சிறுவதுமஞ்சிலன்றீயோன்
றந்தைதன்னையுநாரணன்றன்னையுந்தகவான்
முந்துபூசனைபுரிந்தனன்முகமன்கண்மொழியா. (௨)

மற்றைவானவர்யாவர்க்குமுனிவர்க்குமரபா
லெற்றுவேண்டியவவையெலாநல்கியேயிதற்பின்
பெற்றமங்கையர்தமக்குமாமருகர்க்கும்பெரிது
மற்றமில்லதோர்மங்கலத்தொல்சிறப்பளித்தான். (௩)

நாலுமாமுகக்கடவுள்சேயித்திறநல்கி
மாலும்யாவருங்காத்திடத்தீத்தொழின்மகஞ்செய்
வேலைநோக்கியேதொடங்கினனவ்விடைவேள்விச்
சாலைதன்னிடைநிகழ்ந்தனசாற்றுவன்றமியேன். (௪)

முன்னரேதக்கனேவலும்வினைசெயன்முறையான்
மன்னுதேனுவோராடகச்சாலையின்மாடே
பொன்னின்மால்வரைநடுவுசேர்வெள்ளியம்பொருப்பை
யன்னதாமெனவன்னமாம்பிறங்கலையளித்த. (௫)

ஏதநீங்கியதியபாலடிசிலுமெண்ணில்
பேதமாகியமுதிரையினுண்டியும்பிறவா
மோதனங்களும்வீற்றுவீற்றாகவேயுலகின்
மாதிரங்களிற்குலகிரியாமெனவகுத்த. (௬)

நெய்யினோடளர்விரைகெழுநுண்டுகணீவிக்
குய்யினாவியெவ்வுலகமுநயப்புறக்குழுமி
வெய்யதாகியகருணைகடிசைதொறுமேவு
மையல்யானைகளாமெனவழங்கிற்றுமாதோ. (௭)

அண்ணல்சேர்வெந்தைதோயவைநொலையலேயாதிப்
பண்ணியங்களுந்தாரமுங்கனிவகைபலவு
மண்ணின்மேலுறுகிரியெலாங்குலகிரிமருங்கு
நண்ணினாலெனத்தொகுத்தனயாவருநயப்ப. (௮)

விருந்தினோர்கொளவிழுதுடன்பாறயிர்வெள்ளந்
திருந்துகங்கையும்யமுனையுமாமெனச்செய்த
வருந்துமுண்டிகள்யாவையும்வழங்குகோவதனிற்
பொருந்துகின்றதுதந்ததென்றாலதுபுகழோ. (௯)

தாவில்பாளிதமான்மதஞ்சாந்துதண்பனிநீர்
நாவிவெள்ளடைசெழும்பழுக்காயொடுநறைமென்
பூவுமேனையபொருள்களுநல்கினபுகழ்சேர்
தேவர்கோமகன்பணிபுரிகின்றதோர்தேனு. (௧௦)

ஆவதிவ்வகையாவதுநல்கியேயங்கண்
மேவுகின்றதுமணியுமச்சங்கமும்வியன்சேர்
காவுமம்புயநிதியமுந்தக்கனுங்கடியோ
னேவலாலருட்சாலையிலடைந்தனவிமைப்பில். (௧௧)

கணிதமில்லதோர்பரிதிகண்மேணியிற்கருது
மணிகளோர்புடைதொகுத்தனவாடவரைபோ
லணிகொள்காஞ்சனமோர்புடைதொகுத்தனவும்பொற்
பணிகளாடைகளோர்புடைதொகுத்தனபடைத்தே. (கஉ)

மற்றும்வேண்டியபொருளெலாமுதவியம்மருங்கி
னுற்றவேலையத்தக்கனதேவவிஞெழுகா
நிற்றல்போற்றியமுனிவரர்யாவருநிலத்தோர்க்
கிற்றெலாமிவண்வழங்குதும்யாமெனவிசைத்தார். (கந)

வே று.

இன்னவேலையிலிச்செயல்யாவையு, முன்னமேயுணர்முப்புரிநூலினர்
துன்னியேமனந்துண்டவந்தொல்லையி, லன்னசாலைதனையணைந்தாரரோ. (கச)

சாலைகாண்டலுந்தக்கனையேத்தியே, பாலர்தன்மையிற்பாடினராடினர்
கோலமார்பிற்குலாவியவெண்டுகில், வேலையாமெனவீசிநின்றார்த்துளார். (கரு)

மிண்டுகின்றவவ்வேதியர்தங்களைக், கண்டுவம்மின்கதுமெனநீரெனக்
கொண்டுசென்றுகுழுவொடிருத்தியே, யுண்டிதன்னையுதவுதன்மேயினார். (கசு)

மறுவில்செம்பொன்மணிகெழுதட்டைக, ளிறுதியில்லனயாவர்க்குமிட்டுமே
னறியவுண்டிகணல்கியின்னோர்தமக், குறவினோரெனவூட்டுவித்தாரவண். (கஎ)

அன்னகாலையரும்பசிதீர்தரத், துன்னவுண்டுஞ்சுவையுடைத்தாதலா
லுன்னியுன்னியிவ்வுண்டிகள்சாலவு, மின்னம்வேண்டுமெனவுரைப்பார்சிலர். ()

குற்றமொன்றுளகூறுவதென்னினி, நற்றவஞ்செய்துநான்முகனுவிவ
ணுற்றவுண்டியெலாமுணவோர்பசி, பெற்றிலோமெனப்பேதுறுவார்சிலர். (ககூ)

வீறுமுண்டிமிசைந்திடவேண்டும்வாய், நூறுநூறதெனநுவல்வார்தலை
யேறவேண்டுமிதிலமையாதெனச், சீறியேயிகல்செய்திடுவார்சிலர். (உ0)

புலவர்கோனகர்போற்றியதேனுவந், தலகிலிவ்வுணவாக்கியதாலெனாச்
சிலர்புகன்றனர்தேக்கிடவுண்மினோ, வுலவலீரெனவோதுகின்றார்சிலர். (உக)

அறிவிலாதவயன்மகன்யாகமின், றிறுதியாமென்றிசைத்தனரன்னது
பெறுதியேனுமிப்பேருணவேநமக், குறுதிவல்லையிலுண்மினென்பார்சிலர். (உஉ)

உண்டிலேமிவணுண்டதிலீதுபோற், கண்டிலேமொருகாட்சியுமின்பமுங்
கொண்டிலேமின்றுகொண்டதிலீசனால், விண்டிலேமெனின்மேலதென்பார்சிலர்.

எல்லையில்லுணவீயுமித்தேனுவை, நல்லநல்லதொர்நாண்கொடியாத்திவண்
வல்லைபற்றிநம்மாநகரிற்கொடு, செல்லுதும்மெனச்செப்புகின்றார்சிலர். (உச)

மக்கள்யாவரும்வானவர்யாவரு, மொக்கல்யாவருமுய்ந்திடவாழ்தலாற்
றக்கனேற்றதவத்தினுமுண்டுகொண், மிக்கதென்றுவிளம்புகின்றார்சிலர். (உரு)

மைமர்தனிட்டனமாந்திடநான்முகன், றந்திலன்வயின்சாலவுமாங்கவன்
சிந்தைமேலழுக்காறுசெய்தானெனா, நொந்துநொந்துநுவலுகின்றார்சிலர். (உசு)

குழுவுசேர்தருகுய்யுடையுண்டிகள், விழைவினோடிமிசைந்தனமாற்றவும்
பழுதிலாவிப்பரிசனர்தம்மொடு, மெழுவதெப்படியென்றுரைப்பார்சிலர். (உஎ)

இந்தநல்லுணவீண்டுநுகர்ந்திட, நந்தமைந்தரைநம்மனையாங்கொடு
வந்திலம்மினிவந்திடுமோவெனாச், சிந்தைசெய்தனர்செப்புகின்றார்சிலர். (உஅ)

அன்னபற்பலவார்கலியாமெனப், பன்னிறங்கும்புனவர்கள்கேட்டன
ரென்னமற்றவையாவையுமார்தர, முன்னளித்தருமுனிவரருத்தினர். (௨௯)

அருத்திமிச்சிலகற்றியருந்தவ, விருத்திமேவியவேதியர்தங்களை
யிருத்திமற்றெரிருக்கையில்வாசநீர், கரைத்தசந்தின்கலவைவழங்கினர். (௩௦)

நளிகுலாவியநாவிநரந்தம்வெண், பளிதம்வெள்ளடைபாகுடனேனவை
யளியுலாவுமணிமலர்யாவையு, மொளிறுபீடிகையுய்த்தனர்நல்கினர். (௩௧)

அரைத்தசாந்தமணிந்துமெய்யெங்கணும், விரைத்தபூந்துணர்வேய்ந்தபைங்காய
டை, பரித்துநின்றபனவர்புத்தேளுறுந், தருக்களாமெனச்சார்ந்தனரென்பவே. ()

ஆனபான்மையிலந்தணர்யாவரு, மேனகாதலின்வெய்தெனவேகியே
வானமண்ணிடைவந்தெனவேர்கெழு, தானசாலைதனையடைந்தார்களே. (௩௩)

அடையும்வேலையயனருள்காதலன், விடையினலங்கண்மேவுமுனிவர, ரிடைய
ருதவர்க்கீந்தனரீந்திடுங், கொடையினுலெண்ணில்கொண்டலைப்போன்றுளார். ()

பொன்னைநல்கினர்பூணொடுபூந்துகி, றன்னைநல்கினர்தண்சுடரோனென
மின்னைநல்கும்வியன்மணிநல்கினர், கன்னியாவுங்கறவையுநல்கினர். (௩௫)

படியிலாடகப்பாதுகைநல்கினர், குடைகணல்கினர்குண்டிகைநல்கினர்
மிடையும்வேதியர்வேண்டியவேண்டியாங், கடையநல்கினரங்கைகள்சேப்பவே.()

இந்தவண்ணமிறையதுந்தாழ்க்கிலர், முந்துநின்றமுனிவரராண்டுறு
மந்தணாளர்க்கயினியொடாம்பொரு, டந்துநின்றுதயங்கினரோர்புடை. (௩௭)

அற்றமில்சிறப்பந்தணராயிடைப், பெற்றபெற்றபெருவளன்யாவையும்
பற்றிமெல்லப்படர்ந்தனர்பற்பல, பொற்றைசெய்தனர்போற்றினரோர்புடை. ()

வரத்திறைகும்வரம்பில்வெறுக்கைதம், புரத்தினுய்த்திடும்புந்தியிலன்னவை
யுரத்தினுற்றமக்கொப்பரும்வேதியர், சிரத்தின்மேற்கொடுசென்றனரோர்புடை. ()

அரிதனூர்தியுமன்னமுங்கீழ்த்திசை, யரிதனூர்தியுமாங்கவன்மாக்களு
மரிதனூர்தியுமாருயிர்கொண்டிடு, மரிதனூர்தியுமார்ப்பனவோர்புடை. (௪௦)

தானமீதுதயங்கியதேவரு, மேனையோர்களுமிவ்விடையீண்டலின்
மீனமார்தருவிண்ணெனவெண்ணிலா, மானகோடிமலிகின்றவோர்புடை. (௪௧)

நரம்பின்வீணைஞரதுறும்வேய்ங்குழல், பரம்புதண்ணுமைபண்ணமைபாடனூல்
வரம்பினேய்ந்திடவானவர்நாடவே, யரம்பைமார்களின்றாடினரோர்புடை.(௪௨)

தேவர்மாதருஞ்சிற்சிலதேவருந், தாவிலாமகச்சாலையின்வைகிய
காவுதோறுங்கமலமலர்ந்திடு, மாவிதோறுமுற்றாடினரோர்புடை. (௪௩)

வேதவல்லிவியப்புடனல்கிய, காதன்மாதருங்காமருவிண்ணவர்
மாதராருஞ்சசியுமகத்திரு, வோதிநாடியங்குற்றனரோர்புடை. (௪௪)

இனையபற்பலவெங்கணுமீண்டலிற், கனைகொள்பேரொலிகல்லெனவார்த்தன
வனையன்வேள்விக்ககன்கடல்யாவையுந், துனையவந்தவண்சூழ்ந்தனபோலவே. ()

ஊனமேலுறும்பருமிம்பரு, மேனகாதலின்மிக்கவணீண்டவே
வானயாறுவருநதியும்புவித், தானயாறுந்தழீஇயினபோன்றவே. (௪௬)

தானப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧,௨௫௬.

# வேள்விப்படலம்.

இகந்தசீர்பெறுமிப்பெருஞ்சாலையி, லகந்தைமிக்கவயன்பெருங்காதலன்
மகம்புரிந்ததுமற்றதுசிந்திடப், புகுந்தவாறும்பொருக்கெனக்கூறுகேன். (க)

வேறு.

மருத்துழாய்முடிமாலயன்பாங்குறமகத்தின்
கருத்தனாகியநீயவன்முன்னமேகருதி
வரித்தமேலவர்தங்களைநோக்கியேமரபி
னிருத்துமுத்தழலென்றலுநன்றெனவிசைந்தார். (உ)

முற்றுநாடியவிருத்திஞோரரணியின்முறையா
லுற்றவங்கியைவேதிகைப்பறப்பைமேலுய்த்துச்
சொற்றமந்திரமரபினாற்பரிதிகள்சூழ்ந்து
மற்றுமுள்ளதோர்விதியெலாமியற்றினர்மன்னோ. (ஙூ)

ஆங்குமுத்தழல்விதிமுறைசெய்தலுமயன்சேய்
பாங்கருற்றிடுமிருத்தினர்யாரையும்பாரா
சீங்கணுங்களுக்காகியசெய்கையைநினைந்து
தூங்கலின்றியேபுரிமினோகடிதெனச்சொன்னான். (ச)

சொன்னவாசகங்கேட்டலுமிருத்திஞோர்தொகையின்
முன்னமாகியவம்மகந்தனக்கவிமுழுதும்
வன்னியாதியாஞ்சமிதையுந்தருப்பையுமற்று
மின்னபோல்வதுங்கொடுவழங்கினர்களாறிருவர். (ரு)

அந்தவேள்விசெய்வித்தனரொருவராலவிக
ளெந்தையல்லவர்கொள்ளவேயவரவர்க்கிசைத்த
மந்திரந்தனைப்புகன்றனரொருவரவ்வானோர்
தந்தமைக்குறித்தழைத்தனரொருவர்பேர்சாற்றி. (சா)

மற்றவர்க்கெலாமமைந்திடுமவிகளைமலர்க்கை
பற்றியங்கிவாயளித்தனரொருவரப்பரிசி
னற்றநோக்கியேயிருந்தனரொருவரங்கதற்கு
முற்றுநல்லருள்புரிந்தனரொருவரம்முதல்போல். (எ)

இருத்திஞோர்களும்பிறருமீதியற்றுழியாக
கருத்தனாகியதக்கனத்தேவரைக்கருதிப்
பரித்துநூங்குதிரென்றவிபுரிதொறும்பகர்ந்தே
யருத்தியுற்றனன்கடவுளர்தமக்கெலாமுதின். (அ)

திருந்துகின்றநற்சுவையினாற்றூய்மையாற்றிகழு
மருந்துபோன்றனவென்னினுமுயிர்தொறுமனத்து
மிருந்தவெம்பிரானன்றியேமிசைதலினிமையோர்க்
கருந்துநீரலாநஞ்செனலாகியவவிகள். (கூ)

வேள்விப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - க,உகூ௫.

# உமைவருபடலம்.

பேசுமிவ்வேள்விபிதாமகன்மைந்த, னாசம்விளைந்திடநாடியியற்ற
மாசறுநாரதமாமுனியுற்றே, காசினிமேலிதுகண்டனனன்றே. (௧)

கண்டனனாலமர்கண்டனைநீக்கிப், புண்டரிகந்திகழ்புங்கவன்மைந்த
னண்டருடன்மகமாற்றினனன்னான், றிண்டிறல்கொல்லிதுசெய்திடலென்னா. (௨)

எண்ணியநாரதனெவ்வுலகுஞ்செய், புண்ணியமன்னதொர்பூங்கயிலாய
நண்ணிமுன்னின்றிடுநந்திகளுய்ப்பக், கண்ணுதல்சேவடிகைதொழுதுற்றான். (௩)

கைதொழுதேத்தியகாலையன்னானை, மைதிகழ்கந்தரவள்ளல்கண்ணுற்றே
யெய்தியதென்னிவணிவ்வுலகத்திற், செய்தியதென்னதுசெப்புதியென்றான். (௪)

எங்கணுமாகியிருந்தருள்கின்றசங்கரனிம்மொழிசாற்றுதலோடு
மங்கதுவேலையிலம்முனிமுக்கட், புங்கவகேட்டியெனப்புகல்கின்றான். (௫)

அதிர்தருகங்கையதன்புடைமாயோன், விதிமுதலோரொடுமேதருதக்கன்
மதியிலியாயொர்மகம்புரிகின்றான், புதுமையிதென்றுபுகன்றனனம்மா. (௬)

ஈங்கிதுகூறலுமெம்பெருமான்றன், பாங்கரின்மேவுபராபரைகேளா
வாங்கவன்மாமகமன்பொடுகாண்பா, ளோங்குமகிழ்ச்சியுளத்திடைகொண்டாள். (௭)

அங்கணனல்லருளாலனையான்றன், பங்குறைகின்றனள்பாங்கரினீங்கி
யெங்கள்பிரானையெழுந்துவணங்கிச், செங்கைகுவித்திதுசெப்புதலுற்றாள். (௮)

தந்தையெனப்படுதக்கனியற்று, மந்தமகந்தனையன்பொடுநோக்கி
வந்திடுகின்றனன்வல்லையிலின்னே, யெந்தைபிரான்விடையீகுதியென்றாள். (௯)

என்றலுநாயகனேந்திழைதக்க, னுன்றனையெண்ணலனும்பர்களோடும்
வன்றிறலெய்திமயங்குறுகின்றா, னின்றவன்வேள்வியிலேகலையென்றான். (௧0)

இறையிதுபேசலுமேந்திழைவேதாச், சிறுவனெனப்படுதீயதொர்தக்க
னறிவிலனாகுமவன்பிழைதன்னைப், பொறுமதியென்றடிபூண்டனண்மாதோ. (௧௧)

பூண்டனள்வேள்விபொருக்கெனநண்ணி, மீண்டிவண்மேவுவல்வீடருள்செய்யுந்
தாண்டவநீவிடைதந்தருளென்றாண், மாண்டகுபேரருள்வாரிதிபோல்வாள். (௧௨)

மாதிவைகூறலும்வன்மைகொடக்கன், மேதகுவேள்வியப்பினைநோக்குங்
காதலையேலதுகண்டனைவல்லே, போதுதியென்றுபுகன்றனன்மேலோன். (௧௩)

வேறு.

அரன்விடைபுரிதலுமம்மையாங்கவன், றிருவடிமலர்மிசைச்சென்னிதாழ்ந்தெழா
விரைவுடனீங்கியோர்விமானத்தேறினாண், மரகதவல்லிபொன்வரையுற்றாலென.

ஐயைதன்பேரருளனைத்துமாங்கவள்,செய்யபொன்முடிமிசைநிழற்றிச்சென்றென
த், துய்யதொர்கவுரிபாற்சுமாலிமாலினித்,தையலார்மதிக்குடைதாங்கிநண்ணினார்.()

துவரிதழ்மங்கலைசுமனையாதியோர், கவரிகளிரட்டினர்கவுரிபாங்கரி
லிவர்தருமோதிமமெண்ணிலாதவோ, ரவிர்சுடர்மஞ்ஞைபாலடைவதாமென. (௧௫)

கால்செயும்வட்டமுங்கவின்கொள்பீலியு, மால்செயுநறுவிரைமல்கவீசியே
நீல்செயும்வடிவுடைநிமலைபாற்சிலர், வேல்செயும்விழியினர்மெல்லவேகினார். (௧௭)

கோடிகமடைப்பைவாள்குலவுகண்ணடி, மேடுறுபூந்தொடையேந்தியம்மைதன்
மாடுறவணுகியேமானத்தேகினார், தோடுறுவரிவிழித்தோகைமார்பலர். (௧௮)

நாதனதருள்பெறுநந்திதேவியாஞ், குறுமழ்பனைமுலைச்சுகேசையென்பவண்
மாதுமைதிருவடிமலர்கண்டிடுவ, பாதுகைகொண்டுபின்பட்டர்தன்மேயினான், (௧௧)

கமலினியனிந்திதையென்னுங்கன்னிய, ரமலைதன்கரிகுழற்கானபூந்தொடை
விமலமொடேந்தியேவிரைந்துசெல்கின்றார்,திமி * லிமின்றதொல்சேடிமாருடன்

அடுத்திடுமுல்லெலாமளித்தவம்மைசிர், படித்தனரேசினர்சிலவர்பாட்டிசை
யெடுத்தனரேசினர்சிலவரேர்தக, கடித்தனரேசினர்சிலவர்காரிமார். (௨௧)

பாங்கியர்சிலதியர்பலருமெண்ணிலா, வீங்கியபேரொளிவிமானத்தேறியே
யாங்கவள்புடையதாயணுகிச்சென்றன, ரோங்கியகிலவுகுழுடுக்கள்போன்றுளார்.

தண்ணுறுநானமுஞ்சாந்துஞ்சந்தமுஞ், சுண்ணமுங்களபமுஞ்சுடரும்பூண்களு
மெண்ணருந்துகில்களுமிட்டமஞ்சிகை,யொண்ணுதலார்பரித்துமைபின்போயினா

குயில்களுங்கிள்ளையுங்குறிக்கொள்பூவையு, மயில்களுமஞ்சமுமற்றுமுள்ளவும்
பயினுறவேந்தியேபலாமுன்சென்றன, ரயில்விழியணங்கினரளப்பிலார்களே. ௨௪

விடையுறுதுவசமும்வியப்பின்மேதகு, குடைகளுமேந்தியுங்கோடிகோடியா
மிடியுறழ்பல்லியமிசைத்துமம்மைதன், புடைதனில்வந்தனர்பூதரெண்ணிலார். ()

அன்னவளடிதொழுதருள்பெற்றெல்லையிற், பன்னிருகோடிபாரிடங்கள்பாற்பட
முன்னுறவேகினன்மூரியேற்றின்மேற், றென்னெறியமைச்சியற்சோமநந்தியே.()

இவரிவரித்திறமீண்டவெல்லைதீர், புவனமுமுயிர்களும்புரிந்துநல்கிய
கவுரியம்மானமேற்கடிதுசென்றரோ, தவனுறுவோன்மகச்சாலைநண்ணினாள்.(௨௭)

ஏனுறுபானநின்றிழிந்துவேள்வியஞ், சாலையுளேகியேதக்கன்முன்னுறும்
வேலையினுமைதனைவெகுண்டுநோக்கியே, சீலமிலாதவனினையசெப்பினான். (௨௮)

வேறு.

தந்தைதன்னொடுந்தாயிலாதவன், சிந்தையன்புறுந்தேவியானநீ
யிந்தவேள்வியானியற்றும்வேலையில், வந்ததென்கொலோமகளிர்போலவே. (௨௯)

மல்லல்சேருமிம்மாமகந்தனக், கொல்லைவாவெனவுரைத்துவிட்டது
மில்லையீண்டுநீயேகலாகுமோ, செல்லுமீண்டுநின்சிலம்பிலென்னவே. (௩௰)

மங்கைகூறுவாண்மருகர்யார்க்குமென், றங்கைமார்க்குநீதக்கதக்கசீ
ருங்குநல்கியேயுறவுசெய்துளா, யெங்கடம்மையோரிறையுமெண்ணலாய். (௩௧)

அன்றியும்மிவணாற்றும்வேள்வியிற், சென்றவென்னையுஞ்செயிர்த்துநோக்குவாய்
நன்றதோவிதோர்நவையதாகுமா, லென்றனெண்ணம்யாதுரைத்தியென்னவே. ()

ஏயமுக்குணத்தியனுஞ்செய்கையுட், டீயதொல்குணச்செய்கையாற்றியே
பேயொடாடல்செய்பித்தன்றேவியாய், நீயுமங்கவனிலைமையெய்தினாய். (௩௩)

அன்னவன்றனோடகந்தைமேவலா, லுன்னையென்னினானதுபின்னுளோர்
மன்னுகின்றவென்மருகர்யாவரு, மென்னினும்மெனக்கினியர்சாலவும். (௩௪)

ஆதலாலியானவர்கள்பாங்கரே, காதலாகியேகருதுதொல்வளன்
யாதுநல்கினனீந்தவேள்வியி, லோதுநல்லவியுளதுநல்கினேன். (௩௫)

புவனியுண்டமால்புதல்வனாதியா, மெவரும்வந்தெனையேத்துகின்றனர்
சிவனுநீயுமோர்சிறிதுமெண்ணலீ, ருவலகையின்றெனக்குங்கள்பாங்கரில். (௩௬)

---

* திமிலம் - திமிலென்றுயது. ஆனந்தமிகுதியாற் பேரொலிசெய்கின்ற என பது பொருள்.

ஏற்றின்மேவுகின்னிறைவனுக்கியா, ஞற்றும்வேள்வியுளவியுமீகலன்
சாற்றுகின்றவேதத்தின்வாய்மையு, மாற்றுகின்றனன்மற்றென்வன்மையால். (௧௭)

அனையதன்றியீண்டடுத்தசிற்கும்யான், றினையின்காறுமோர்சிறப்புஞ்செய்கல
னெனவியம்பலுமெம்பிராட்டிபாற், றனையவந்ததாற்றேமில்சீற்றமே. (௧௮)

சீற்றமாயதீச்செறியுயிர்ப்பொடே, காற்றிஞேடழல்கலந்ததாமெனத்
தோற்றியண்டமுந்தொலேவிலாவியு, மாற்றுவானெழீஇமல்கியோங்கவே. (௧௯)

பாருமுட்கினபரவுபௌவமுந், நீருமுட்கினநெருப்புமுட்கின
காருமுட்கினகரிகளுட்கின, வாருமுட்கினரமரராயுளார். (௨௦)

பங்கயாசனப்பகவன்றானுமச், செங்கண்மாயனுஞ்சிந்தைதுண்ணென
வங்கணுட்கினரென்னினுங்கவள், பொங்குசீற்றம்யார்புகலவல்லரே. (௨௧)

வேலேயன்னதில்விமலேயென்பவள், பாலினின்றதோர்பாங்கிதாழ்ந்துமுன்
ஞாலம்யாவையுநல்குமுன்றனக், கேலுகின்றதோவினையசீற்றமே. (௨௨)

மைந்தர்யாரையும்வளங்கடம்மொடுந், தந்துநல்கியதாய்சினங்கொளா
வந்தமாற்றுவானமைந்துளாயெனி, னுய்ந்திடுந்திறமுண்டுபோலுமால். (௨௩)

அறத்தையீங்கிவனகன்றுளானெனச், செறுத்தியன்னதோர்சீற்றம்யாரையு
மிறைக்குமுன்னரேயீறுசெய்யுமாற், பொறுத்தியீதெனப்போற்றன்மேயினுள். ()

போற்றிநிற்றலும்புனிதைதன்பெருஞ், சீற்றமாயெழுந்தீயையுள்ளுற
மாற்றிவேள்விசெய்வானேநோக்கியே, சாற்றுகின்றனளினையதன்மையே. (௨௫)

என்னைநீயிவணிகழ்ந்ததன்மையை, யுன்னலேனெனையுடையநாயகன்
றன்னையெள்ளினுய்தரிக்கிலேனதென், கன்னமூடுசெல்கடுவுபோலுமால். (௨௬)

நிர்க்குணத்தனேநிமலனன்னவன், சிற்குணத்தனுய்த்திகழுவானொரு
சொற்குணத்தனேதொலேக்குநாளடு, முற்குணத்தினைமுன்னுமாறலால். (௨௭)

துன்றுதொல்லுயிர்தொலேவுசெய்திடு, மன்றுதாமதத்தடுவதன்றியே
நன்றுநன்றதுஞானநாயகற், கென்றுமுள்ளதோரியற்கையாகுமோ. (௨௮)

தீயதன்றடுஞ்செயலுநல்லரு, ளாயிலாவிகளழிந்துந்தோன்றியு
மோய்விலாதுழன்றலேவுறுமலே, மாய்வுசெய்திறைவருத்தமாற்றலால். (௨௯)

ஆணவச்செயலழிவிலாததோர், ஞானநாயகற்கன்றிநாமெனு
மேனையோர்களாலியற்றலாகுமோ, மேனகாவலும்விதியுமென்னவே. (௩௦)

முன்னரேயெலாமுடித்தநாதனே, பின்னுமத்திறமளிக்கும்பெற்றியா
னன்னவன்கணேயனைத்துமாகுமா, லின்னபான்மைதானிறைவன்வாய்மையே. ()

தோமிலாகமஞ்சுருதிசெப்பியே, யேமவிஞ்சைகட்கிறைவனுகியே
காமறும்பொருணல்குமெந்தையைத், தாமதன்னெனச்சாற்றலாகுமோ. (௩௨)

ஆதலாலவனனைவருக்குமோர், நாதனுமரோவவற்குநல்லவி
யீதல்செய்திடாதிகழ்தியஞ்சியே, வேதம்யாவையும்வியந்துபோற்றவே. (௩௩)

சிவனெனுந்துணைச்சீரெழுத்தினை, நுவலுவோர்கதிகொய்திலெய்துவா
ரவனையெள்ளினுயாரிதாற்றுவா, ரெவனையுய்க்குதியிழுதைநீரைநீ. (௩௪)

வேறு.

முண்டகமிசையினேன்முகுந்தனுடியே
பண்டுணர்வரியதோர்பரனையாதியாக்
கொண்டிலரெள்ளியகொடுமையோர்க்கெலாந்
தண்டம்வந்திடுமெனமறைகள்சாற்றுமால். (௩௫)

ஈதுகேள்சிறுவிதியிங்ஙனோர்மகம்
வேதநாயகன்றனைவிலக்கிச்செய்தனை
யாதலானுனக்கும்வந்தடைகதண்டமென்
றோதினனுலகெலாமுதவுந்தொன்மையான். (௫௬)

இன்னனகொடுமொழியியம்பிவேள்விசெ
யந்நிலமொருவியிவ்வகிலமீன்றுளாள்
முன்னுளபரிசனமுறையின்மொய்த்திடப்
பொன்னெழின்மானமேற்புகுந்துபோந்தனள். (௫௭)

அகன்றலையுலகருளயன்றன்காதலன்
புகன்றனவுன்னியுட்புழுங்கியைந்துமா
முகன்றிருமலையிடைமுடுகிச்சென்றனள்
குகன்றனைமேலருள்கொடிநுசுப்பினாள். (௫௮)

ஒருவினளூர்தியையுமைதன்னாயகன்
றிருவடிவணங்கினள்சிறியதொல்விதி
பெரிதுனையிகழ்ந்தனன்பெருமவன்னவ
னரிதுசெய்வேள்வியையழித்தியென்னவே. (௫௯)

எவ்வமில்பேரருட்கிறைவனாகியோ
னவ்வியங்கரமுடைநாதனாதலி
னவ்வுரைகொண்டிலனாகவம்பிகை
கவ்வையொடிணையனகழறன்மேயினாள். (௬௦)

மேயினகாதலும்வெறுப்புநிற்கிலை
யாயினுமன்பினேற்காகவன்னவன்
றீயதோர்மகத்தினைச்சிதைத்தல்வேண்டுமென்
றாயகனேயெனநவின்றுபோற்றினாள். (௬௧)

உமைவருபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧,௩௨௬.

## வீரபத்திரப்படலம்.

அந்தவெல்லையெமையாளுடையவண்ணலகிலந்
தந்தமங்கைதனதன்பினைவியந்துதளருஞ்
சிந்தைகொண்டசெயன்முற்றியிடுமாறுசிறிதே
புந்தியுள்ளுறநினைந்தனனினைந்தபொழுதே. (௧)

பொன்னின்மேருவினிருந்திடுபொலங்குவடெலா
மின்னும்வெள்ளிமுனைமேற்கொடுவிளங்கியதென
மன்னுதண்சுடர்மதிக்குறைமிலைச்சுமவுலிச்
சென்னியாயிரமும்வான்முகடுசென்றொளிரவே. (௨)

விண்டலந்தனிவிலங்குசுடரின்மிடலினைக்
கண்டலந்தரவொதுங்குவனபோற்கதிருலா
மண்டலந்திகழ்முகந்தொறும்வயங்குபணியின்
குண்டலங்களிணைகொண்டகுழைகொண்டிலவவே (௩)

## வீரபத்திரப்படலம்.

ஆன்றதிண்கடல்வறந்திடவிறந்ததனிடைத்
தோன்றுகின்றதொர்மடங்கல்வலியின்றதொலைய
மூன்றுகண்கண்முகமாயிரமுமேவிமுனிவாற்
கான்றவங்கிகளினண்டமுழுதுங்கரியவே. (௪)

சண்டமாருதமுமங்கியுமொதுங்குதகவாற்
றுண்டமீதுறுமுயிர்ப்புடனெழுந்தசுடுதீ
யண்டகோளமுடனப்புறமுமாகியழியாக்
கொண்டலூடுதவழ்மின்னுவெனவேகுலவவே. (௫)

மலரின்வந்துறையுநான்முகன்முகுந்தன்மகவான்
புலவர்தம்புகழனைத்தையுநுகர்ந்தபொழுதிற்
சிலவொழுங்கொடிதழின்புடைகள்சிந்தியெனவே
நிலவுசெய்தபிறைவாளெயிறுநின்றிலகவே. (௬)

துண்டமீதினழலோவிதழின்வீழ்ந்தசுசியோ
மண்டுதீவிழிகள்கான்றகனலோமனமிசைக்
கொண்டதோர்வெகுளியாகியகொடுந்தழலதோ
வெண்டிசாமுகமுமாகியடுகின்றதெனவே. (௭)

தண்டலின்றுறையுமாவிகள்வெரீஇத்தளரமே
லண்டரண்டநிரைவிண்டிடவவற்றிடையுறுந்
தெண்டிரைக்கடல்கலங்கவடலுற்றசிவனிற்
கொண்டவார்ப்புமுழுதெண்டிசைகுலாய்நிமிரவே. (௮)

தராதலங்கண்முழுதுண்டுமிழுகின்றதகைசே
ரராவினங்கடமையங்கடகமங்கதமொடே
விராயமென்றொடிகளாவிடுபுவிண்ணுறநிமிர்ந்
திராயிரங்கொள்புயமெண்டிசையெலாஞ்செறியவே. (௯)

வரத்தின்மேதகையவேதன்முதலானவலியோர்
சிரத்தின்மாலிகையடுக்கலவரென்புசெறிபூண்
பெருத்தகேழலின்மருப்பினுடனுமைபிறவு
முரத்தின்மேவுபுரிநூலொடுபெயர்ந்தொளிரவே. (௧௦)

குந்தம்வெம்பலகைதோமரமெழுக்குலிசம்வாள்
செந்தழற்கழுமுள்சூலமொடுபீலிசிலைகோன்
முந்துதண்டமவிராழிவசியாலமுதலா
மந்தமில்படைகளங்கைகடொறுங்குலவவே. (௧௧)

ஐயமாழைதனின்மாமணியினாகியதிவார்
செய்யலாதுவருபேரணிகளோடுசிவணிப்
பையுலாவுசுடர்வெம்பணிகளானபணியு
மெய்யெலாமணியிடந்தொறுமிடைந்திலகவே. (௧௨)

நெஞ்சலஞ்சலமரும்பிறவிநீடுவினையிற்
சஞ்சலஞ்சலமகன்றதனதன்பர்குழுவை
யஞ்சலஞ்சலெனுமஞ்சொலெனவிஞ்சுசரண்மேற்
செஞ்சிலம்பொடுபொலங்கழல்சிலம்பமிகவே. (௧௩)

அந்திவான்பெருமேனியன்[illegible]
வெந்தைதன்வடிவாயவனுதல்விழியிடையே
வந்துதோன்றியேமுன்னுறநின்றனன்மற்றோர்
மூந்துவீரபத்திரனெனுந்திறலுடைமுதல்வன். (கச)

அங்கவேலையினுமையவள்வெகுளியாலடல்செய்
நங்கையாகியபத்திரகாளியைநல்கச்
செங்கையோரிரண்டாயிரம்பாதிசெம்முகமாய்த்
துங்கவீரபத்திரன்றனையடைந்தனடுணையாய். (கரு)

எல்லைதீர்தருபடைக்கலதிறையுமவலிறைவற்
புல்லுகின்றதோர்திறலுடைத்துணைவியும்போலத்
தொல்லைவீரனுந்தேவியுமேவருதொடர்பை
யொல்லைகாணுறாமகிழ்ந்தனர்விமலனுமுமையும். (கசு)

தன்னைவந்தடைபத்திரைதன்னொடேதடந்தாண்
மன்னுவார்கழல்கலித்திடவலஞ்செய்துவள்ள
லன்னைதாதையையவணங்கியேயவர்தமைநோக்கி
முன்னநின்றுகைதொழுதனனிவைசிலமொழிவான். (கள)

மாலயன்றனைப்பற்றிமுன்றந்திடோமறவெங்
காலனுவியைமுடித்திடோவசுரரைக்களைகோ
மேலைவானவர்தம்மையுந்தடிந்திடோவேலை
ஞாலம்யாவையும்விழுங்குகோவுலகெலாநடுக்கோ. (கஅ)

மன்னுயிர்த்தொகைதுடைத்திடோவரம்பிலவாகித்
துன்னுமண்டங்கடகர்த்திடோநுமதுநுமலர்த்தாள்
சென்னியிற்கொடேயாவதொன்றெனினுஞ்செய்வ
னென்னையிங்குநீர்நல்கியதெப்பணிக்கென்றான். (க௯)

என்றவீரனைநோக்கியேகண்ணுதலெம்மை
யன்றிவேள்விசெய்கின்றனன்றக்கனவ்விடைநீ
சென்றுமற்றெமதவியினைக்கேட்டியத்தீயோ
னன்றுதந்தனனேயெனினிவ்விடைநடத்தி. (உ0)

தருதவின்றெனினனையவன்றலையினைத்தடிந்து
பரிவினுலவன்பாலுறுவோரையும்படுத்துப்
புரியுமெச்சமுங்கலக்குதியங்கதுபொழுதின்
வருதுமாயிடையேகுதியென்றனன்வள்ளல். (உக)

அந்தவேலையிற்பத்திரைதன்னொடுமடலின்
மூந்துவீரனவவிருவர்தம்பதங்களின்முறையாற்
சிந்தையன்புடன்வணங்கியேவிடைகொண்டுசிவனை
நிந்தைசெய்தவன்வேள்வியையழித்திடநினைந்தான். (உஉ)

உன்னிமற்றவனீங்கியேயாற்றவுமுருத்துத்
தன்னுயிர்ப்பினுலளவையில்கணங்களைத்தந்து
துன்னுகின்றமெய்வியர்ப்பினூற்சிலவரைத்தொகுத்து
வன்னிபோன்மயிர்க்காலுறூஉஞ்சிலவரைவகுத்தான். (உ௩)

# வீரபத்திரப்படலம்.

மொழியினிற்பலபூதரையளித்தனன்முனி
விழியினிற்பலபூதரையளித்தனன்வேணி
யுழியினிற்பலபூதரையளித்தனனுந்திச்
சுழியினிற்பலபூதரையளித்தனன்றூயோன். (உ௪)

தோளிலெண்ணிலாவீரரையளித்தனன்சுவையின்
கோளிலெண்ணிலாவீரரையளித்தனன்குளிர்பொற்
றாளிலெண்ணிலாவீரரையளித்தனன்றடக்கை
வாளிலெண்ணிலாவீரரையளித்தனன்வலியோன். (உ௫)

கையினிற்சிலபூதரையளித்தனன்களத்தில்
வெய்யமார்பினிற்கன்னத்திற்சிலவரைவிதித்தா
னையதோர்முழந்தாடனிற்சிலவரையளித்தான்
குய்யமீதினிலூருவிற்சிலவரைக்கொடுத்தான். (உ௬)

இன்னதன்மையில்வீரபத்திரனெனுமிறைவன்
றன்னைநேர்வருமெண்ணிலாவீரரைத்தந்து
துன்னுகின்றுழிப்பத்திரையென்பதோர்துணைவி
யன்னபண்பினிற்காளிகடொகையினையளித்தாள். (உ௭)

வீரபத்திரவுருத்திரன்வேறுவேறளித்த
சாரதர்க்குளங்கோர்சிலர்நீனிறந்தழைப்போர்
கோரபத்திரமணிக்கலன்மின்னுவிற்குலவக்
காரெனப்பொலிந்துருமெனக்கழறுகின்றனரால். (உ௮)

அக்குமாலையுமணிகளுமுடுக்கள்போலவிரப்
பக்கவாணிலாவெயிறுகள்பிறையெனப்பயில
மிக்குநீடியவடிவினராகியேமேலாஞ்
செக்கர்வானெனச்சேந்தெழுபூதர்கள்சிலரே. (உ௯)

அண்டரைத்தொலைவித்திடும்வீரனையடைந்தோர்
பிண்டமுற்றும்வானிறத்தினர்பூதரிற்பெரியோர்
பண்டிரைத்தொருமுனிமகன்பின்றொடர்பாலின்
றெண்டிரைக்கடற்றொகையெனக்கிளர்ந்தனர்சிலரே. (௩0)

வெம்பொன்மேனியரனுகுறினவர்தமைவிரைவிற்
பைம்பொன்மேனியராக்குமத்திருநிழல்பரப்பி
யம்பொன்மார்புடைமுகுந்தனில்வடிவுடையவராய்ச்
செம்பொன்மால்வரைநிரையெனத்தோன்றினர்சிலரே. (௩௧)

மேயவான்பசப்பூர்தருமேனியராகிக்
காயமித்துணையெனப்படாக்கணக்கினராகி
மாயர்கண்டுயில்சேக்கையைத்தங்கணேவருத்துச்
சேயதொன்மரத்தொகையெனக்கெழீஇயினர்சிலரே. (௩௨)

வேறு.

அங்கவர்க்குளடல்விடையானனந், தங்கின்றுதயங்கினரோர்சிலர்
பொங்குசீற்றப்பொருதிறல்வாளுளைச், சிங்கமாமுகமாய்த்தெழித்தார்சிலர். (௩௩)

புழைகொள்கையுடைப்போர்வலியாளியின், முழைகொண்மாமுகமாகிமொய்த்தார்
சிலர், வழுவையானனமன்னினரோர்சில, ருழுவையின்முகமாகியுற்றார்சிலர். ()

அலைமுகப்பரியானனமெய்தியே, கொலைமுகத்துக்குழீஇயினரோர்சிலர்
மலைமுகத்துமரைகளிறெண்குடன், கலைமுகத்துக்கவினடைந்தார்சிலர். (௩௫)

இனையர்தங்குழுவெண்ணிலவன்னர்கைப், புனையகின்றபொருபடையெண்ணில
வினைகொள்வன்மையும்வீரமுமிற்றென், [illegible]ங்ஙனிகழ்த்துகேன். ()

கையிலெண்ணில்படையினர்காய்சினற், செய்யபூணினர்தீக்கலுழ்கண்ணினர்
வெய்யசொல்லர்வெருவருமேனியர், வையம்யாவுமடக்குறும்வாயினர். (௩௭)

கட்டுசெஞ்சடைக்கற்றையர்காய்ந்தெழு, நெட்டழற்குகிர்வருநாவினர்
வட்டி * மாலைகண்மானுமெயிற்றினர், தொட்டமூவிலைச்சூலந்துளக்குவார். (௩௮)

துண்டமீதுசொரிதருந்தீயினர், ரண்டகூடமலைத்திடுங்கையினர்
சண்டமாருதந்தாழ்க்குஞ்செலவினர், குண்டுபோரென்றுளந்தளிர்ப்பெய்துவார். ()

மடித்தவாயினர்வானவரென்பினாற், றொடுத்தகண்ணிதுயல்வருமார்பினர்
தடித்ததோளர்தனித்தழலென்னினும், பிடித்துநுங்கும்பெரும்பசிமிக்குளார். (௪0)

நச்சிற்றீயவர்ஞாலமங்கையு, மச்சுற்றெஞ்சவடிகள்பெயர்த்துளார்
கச்சைத்தோன்மிசைகட்டியதட்டி † ய, ருச்சிட்டம்மென்றுலகினையுண்கிலார். ()

சூழியானைதுவன்றியமால்வரைப், பாழியாகப்படர்செவிவாயின
ரூழிமாருதமுட்குமுயிர்ப்பின, ராழியாகவகன்றவகட்டினார். (௪௨)

ஆழ்ந்தசூர்ப்பசுங்கண்ணரடித்துணை, தாழ்ந்தகையர்தடக்குறுந்தாளினர்
வீழ்ந்துமிக்கவியனதரத்தினர், சூழ்ந்தபூதத்தொகையினர்யாவரும். (௪௩)

வேறு.

அத்தகைசின்றிடவண்ணலுடன்சேர், பத்திரகாளிபயந்திடுகின்ற
கத்துகடற்புரைகாளிகடம்மை, யித்துணையேயெனவெண்ணரிதாமால். (௪௪)

அந்தமில்பல்படையங்கையிலேந்தி, யுந்தியதும்பைகளுச்சிமிலைச்சிச்
சுந்தரமெய்தியதோற்றமதாகி, விந்தையெனச்சிலர்மேவினரன்றே. (௪௫)

தோளின்மிசைத்திரிசூலமிலங்கக், கோளிலுயிர்ப்பலிகொள்கலனேந்தித்
தாளிடைநூபுரசாலமிலங்கக், காளிகள்போற்சிலர்காட்சிமலிந்தார். (௪௬)

வாகி ‡ னியெங்குளவென்றிடமல்கு, மோகினிபோற்சிலர்மொய்த்தனர்மாயச்
சாகினி ¶ போற்சிலர்சார்ந்தனரல்லா, யோகினிபோற்சிலருற்றனரம்மா. (௪௭)

அயிருறவண்டமனைத்தையுமெற்று, வுயிரவிதுங்கியவுன்னியெழுந்தே
செயிரவியாதுதெழித்திடுதொன்னாள், வயிரவிபோற்சிலர்மன்னினர்மாதோ. (௪௮)

நீடலைமாலைநிலத்திடைதோய, வாடுறுபாந்தளணிக்கலன்மின்ன
வீடுறுவானுருமேறெனவார்த்தே, மோடிகளாமெனமொய்த்தனர்சில்லோர். (௪௯)

இவ்வகைமாதர்கள்யாவரும்வெவ்வே, றைவகைமேனியராய்வதனங்கள்
கைவகையெண்ணிலராய்க்கவின்மாட்சிச், செவ்வியராய்ச்செருமேற்கினர்கின்றார்.

வேறு.

கணந்திகழனையபூதர்காரிகைமார்கள்யாரு
மணங்குறுகாளிதன்னோடாண்டகைவீரன்றாளிற்
பணிந்தனர்பரசியன்னார்பாங்கரில்விரவிச்சூழ்ந்து
துணங்கைகொட்டாடிப்பாடித்துள்ளியேபோதலுற்றார். (௫௧)

---

* வட்டி - பலகறை.

† தட்டி - அரையிற்கட்டும் உடைவிசேடம். இக்காலத்து அரைச்சல்லட மென்ப.

‡ வாகு - அழகு. ¶ சாகினி - பார்வதியினுடைய தோழிகளிலொருத்தி.

ஈட்டமிக்கெழுந்துசெல்லுமின்னதோர்பூதர்தம்மின்
மோட்டிகற்பானுகம்பன்முதலியகணங்கண்முத்தி
வீட்டுடைத்தலைவனைவீரபத்திரன்முன்னாகி
யீட்டுடைப்பல்லியங்கள்யாவையுமியம்பிச்சென்றார். (௫௨)

கொண்டபேராற்றலோடுங்குலவியவீரன்றன்பா
லண்டமேலுரிஞ்சப்பல்வேறணிப்பெருங்கவிகைகொண்டும்
விண்டுலாங்கவரியீட்டம்வீசியுஞ்சேறலுற்றார்
தண்டனேபிறகிசிங்கனாதியாந்தறுகட்பூதர். (௫௩)

பாசிலைமகளிர்சில்லோர்பத்திரைபாங்கராகித்
தேசுடைக்கவிகையீட்டந்திருநிழல்பரப்பவேந்தி
மாசறுகவரிவட்டம்வரம்பிலவிரட்டிப்பல்வே
றாசிகள்புகன்றுசெம்பொனணிமலர்சிதறிப்போந்தார். (௫௪)

படர்ந்திடுபுணரிபோலப்பார்முழுதீண்டித்தானை
யடங்கலுமாக்குமோதையகிலமுஞ்செறியவிண்ணு
முடைந்ததவண்டங்கொல்லோவுதுகொலோவிதுவோவென்ன
மிடைந்தபல்லண்டதோரும்விதிர்ப்பொடும்விளம்பலுற்றார். (௫௫)

பூழிகளெழுந்தவம்மாபுவியெலாம்பரவித்தொல்பே
ராழியுமடைத்துவான்புக்கச்சுதன்பதங்காறேகி
யூழியின்முதல்வனார்க்குமொலியினாலுடைந்தவண்டப்
பாழிகடொறுமுற்றெல்லாப்புவனமும்பரந்தவன்றே. (௫௬)

அங்கெழுபூழிதன்னாலவர்விழிகளுழுந்தியாற்
செங்கையிற்படைகடேய்ப்பச்சிதறியகனலால்வைய
மெங்கணுமெரிகடுன்னியிரும்புகைப்படலமீண்டிக்
கங்குலும்பகலுங்காணக்கடைப்பகல்போன்றதன்றே. (௫௭)

இப்பெருந்தானைசூழவெம்பிரானெழுந்துசீற்றத்
துப்புடனேகித்தக்கன்றொன்மகம்புரியுஞ்சாலை
வைப்பினையணுகித்தன்பால்வருபடைத்தலைவர்க்கொன்று
செப்பினனென்பமன்னோசேணுருமேறுநாண. (௫௮)

பற்றலர்புரமூன்றட்டபரமனையிகழ்ந்துநீக்கிச்
சிற்றினம்பொருளென்றுன்னிச்சிறுவிதியென்னுந்தீயோ
னிற்றிடுநெறியால்வேள்வியியற்றுமிச்சாலைவாயில்
சுற்றொடுசேமஞ்செய்துதுயக்கறக்காத்திரென்றான். (௫௯)

என்றலுந்தானையோர்களெயிற்புறமுற்றுஞ்சூழ்ந்து
நின்றனர்வானினூடுநெருங்கினர்வாய்தறோறுஞ்
சென்றனர்கொடியதக்கன்சேனையரெதிர்ந்தோர்தம்மைக்
கொன்றனரவருன்றுய்த்துக்கூற்றனுமுட்கவார்த்தார். (௬0)

வீரபத்திரப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧,௩ ௮௬.

---

## யாகசங்காரப்படலம்.

வேலையங்கதனின்மேல்வான்விசும்பிடைவேலை
மாலயன்றனுமுட்கமகத்தினின்முன்னடைந்தவோனே
சீலமதகன்றகொள்கைச்சிறுவிதியவற்கண்டேங்கிச்
சாலவுநடுக்குற்றுள்ளந்தளர்ந்தனன்றலைமைநீங்கி. (கக)

சாரதர்வளைந்தவாறுஞ்சாலையதுடையுமாறு
மாருமங்குற்றவானோரயர்வுறுமாறுநோக்கிப்
பேரஞருழந்துதேறிப்பெருந்திறலாளன்போல
வீரபத்திரனைநோக்கிவிளம்பினனினையதொன்றே. (கஉ)

இங்குவந்தடைந்ததென்கொல்யாரைநீயென்னவோடுஞ்
சங்கரன்றனதுசேயான்றக்கநின்வேள்விதன்னி
னங்கவற்குதவும்பாகமருளுதியதற்காவந்தப்
புங்கவனருளினாலேபோந்தனனீண்டையென்றான். (கங)

இத்திறம்வீரன்கூறவிருந்தவத்தக்கனுங்க
ளத்தனுக்குலகம்வேள்வியதனிடையவியின்பாக
முய்த்திடாதென்னவங்கணுறைதருமறைகளொன்றுஞ்
சுத்தமார்குடிலைதானுந்துண்ணெனவெழுந்துசொல்லும். (கச)

ஈறிலாவுயிர்கட்கெல்லாமிறையவனொருதானாகு
மாறிலாவரனேயல்லான்மகத்தினுக்கிறையாயுள்ளோன்
வேறொருவானவனுமுண்டோவேள்வியிலவற்குநல்குங்
கூறுநீபாணியாதுகொடுத்தியாலென்றவன்றே. (க[illegible]

தேற்றமில்சிதடனாகுஞ்சிறுவிதிகேட்பவின்ன
கூற்றினான்மறைகளொன்றுங்குடிலையுமொருங்குகூடிச்
சாற்றலுமன்னானல்காத்தலைமைகண்டிறைவன்றொல்சீர்
போற்றியங்ககன்றுதத்தம்புகலிடம்போயவன்றே. (கசு)

போதலுந்தக்கன்றன்னைப்பொலங்கழல்வீரன்பாரா
வேதமும்பிறவுங்கூறும்விழுப்பொருள்கேட்டியன்றே
யீதியெம்பெருமாற்குள்ளவின்னவியெனலுங்காணிற்
பேதையொடாடல்செய்யும்பித்தனுக்கீயேனென்றான். (கஎ)

ஆங்கதுகேளாவண்ணலம்புயனாதியாகிப்
பாங்குறவிரவும்வானோர்பல்குழுவதனைநோக்கி
நீங்களுமிவன்பாலானீர்நிமலனுக்கவிநல்காம
லீங்கிவனிகழுந்தன்மையிசைவுகொளுமக்குமென்றான். (கஅ)

என்றலுமனையர்தொல்லூழிசைவினாலதுகேளார்போ
லொன்றுமங்குரையாராகியூமரினிருந்தவோடு
நின்றதோர்வீரன்வல்லேநெருப்பெழவிழித்துச்சீறி
நன்றிவர்வன்மையென்னாநகையெயிறிலங்கநக்கான். (ககூ)

கடித்தனனெயிறுசெந்தீக்கான்றனன்கன்றுகையிற்
பிடித்திடுமேருவன்னபெருந்திறற்கதையதொன்றாற்
றடித்திடுமெகலமார்பத்தடவரையகடுசாய
வடித்தனன்றக்கனுள்ளம்வெருவரவரிமுன்வீழ்ந்தான். (உ௦)

விட்டு * முன்வீழ்தலோமே[illegible]
மட்டுறுமலைபோ[illegible]
சிட்டனோக்கியன்னான்சிரத்திடையுருமுற்றென்னக்
குட்டினனொருதன்கையான்மேல்வருங்குமரனேபோல். (உக)

தாக்குதலோடுமையன்சரணிடைப்பணிவான்போல
மேக்குறுசென்னிசோரவிரிஞ்சனும்வீழவன்னான்
வாக்குறுதேவிதன்னைமற்றவர்தம்மைவாளான்
மூக்கொடுகுயமுங்கொய்தாணிறுதிநாண்முதல்வன்போல்வான். (உஉ)

ஏடலாந்தொடையல்வீரனித்திறமிவரைமுன்னஞ்
சாடினனாதகண்டங்கட்சார்தருமிமையே[illegible]ரு
மோடினருலந்தார்வீழ்ந்தாரொளித்திடற்கிடமேதென்று
தேடினரொருவரின்றிச்சிதறினர்கதறுகின்றார். (உங)

வேறு.

இன்னதோர்காலையிலிரிந்துபோவதோர், மெய்ந்நிறைமதியினைவீரன்காணுறாத்
தன்னொருபதங்கொடேதள்ளிமெல்லெனச், சின்னமதுறவுடறேய்த்திட்டானரோ

அடித்தலங்கொடுமதியதனைத்தேய்த்தபின், விடுத்தனன்கதிரவன்வெருவியோடலு
மிடித்தெனக்கவுளிடையெற்றினனவ, னுடுத்திரளுதிர்ந்தெனவுகுப்பதந்தமே. ()

எறித்தருகதிரவனெயிறுபார்மிசைத், தெறித்திடவுயிரொரீஇச்சிதைந்துவீழ்தலும
வெறித்தருபகனெனும்வெய்யவன்விழி, பறித்தனன்றகுவதோர்பரிசுநல்குவான. ()

தொட்டலும்பகன்விழித்துணையயித்திறம், பட்டதுதெரிந்துயிர்பலவும்பைப்பை
ய, வட்டிடுகூற்றுவனலமந்தோடலும், வெட்டினனவன்றலைவீரவீரனே. (உஎ)

மடிந்தனன்கூற்றுவனாகவாசவ, னுடைந்தனன்குயிலெனவுருக்கொண்டுமே
பரி, லடைந்தனனதுபொழுதண்ணல்கண்ணுறீஇத், தடிந்தனன்வீட்டினன்றடக்
கைவாளினால். (உஅ)

அண்டர்கோன்வீழ்தலுமலமந்தோடிய, திண்டிறலங்கியைத்திறல்கொள்சேவகன்
கண்டனனங்கவன்கரத்தையொல்லையிற், றுண்டமதாகவேதுணித்துவீட்டினன.

கறுத்திடுமிடறுடைக்கடவுட்டேவனை, மறுத்தவனல்கியவரம்பிலுண்டியும்
வெறுத்திலையுண்டியாலென்றுவீரனு, மறுத்தனனெழுதிறத்தழலினாக்களே. (௩0)

துள்ளியநாவொடுந்துணிந்தகையொடுந், தள்ளுறவீழ்ந்திடுந்தழலின்றேவியை,
வள்ளுகிரைக்கொடுவலங்கொளுசியைக், கிள்ளினன்வாளையாற்கிளர்பொற்றோ
ளினான். (௩க)

அரிதுணைக்கின்னதோராணைசெய்திடு, மொருதனித்திறலினனும்பர்மேலெழு, நிரு
தியைக்கண்டனனிற்றியாலெனுப், பொருதிறற்றண்டினாற்புடைத்திட்டானரோ. ()

வீட்டினனிருதியைவீரன்றன்பெருந், தாட்டுணைவீழ்தலுந்தடிதலோம்பினா,
னோட்டினன்போதிரென்றுரைத்துச்சென்னெறி, காட்டினனுருத்திரகணத்தாக்
கென்பவே. (௩௩)

ஒழுக்குடைமு[illegible]ரொருங்குபோதலு, மெழுக்கொடுவெருணையெற்றிச்செ
ங்கையின், மழுக்கொள்கொவினையாய்த்துழுத்தலைக், கழுக்கொடுதனதனைக்கடவுள்
காதினன். (௩௪)

* விட்டு - வலித்தல்விகாரம்.

எட்டெனுந்திசையிறேனெங்கிவெள்கியே, யட்டினெங்கோல்லெனவஞ்சிப் போற்றலுங், கிட்டினன்வைதனன்கேடுசெய்திலன், விட்டனனுருத்திரர்மேவுக் தொன்னெறி. (௧௬)

தாணுவினுருக்கொடுதருக்குபேரிஞ, ருறெனுடுபோதலுநகேடுங்கியே சோணிதபுரத்திறைதுண்ணென்றேடிழி, வேணுவினவன்றலைவீரன்வீட்டினன்.()

மணனயர்சாலையின்மகத்தின்றெய்வதம், பிணையெனவெருக்கொடுபெயர்ந்து போதலுங், குணமிருவரிசிலைகுனித்துவீரனேர், கணைதொடுத்தவன்றலைகளத்தில் வீட்டினன். (௧௭)

இரிந்திடுகின்றதோரெச்[illegible]னன்பவன், சிரந்துணிபடுதலுஞ்செய்கையிவவெ லா, மரந்தையொடேதெரிந்தயன்றன்காதலன், விரைந்தவணெழுந்தனன்வெருக் கொள்சிந்தையான். (௧௮)

விட்டனன்றிண்மையைவெய்யதோர்வலைப், பட்டதொர்பிணையெனப்பதை க்குஞ்சிந்தையான், மட்டிடவரியவிம்மகமுமென்முனங், கெட்டிடுமோவெனுவி வைகிளத்தினன். (௧௯)

ஊறகனுன்முகத்தொருவன்வாய்மையாற், கூறியவுணர்வினைக்குறித்துரோற்றியா றுறணிசெஞ்சடையமலன்றந்திட, வீறகல்வளம்பலவெய்தினேனரோ. (௨0)

பெருவளநல்கியபிரானைச்சிந்தையிற், கருதுதல்செய்திலன்கசிந்துபோற்றில ன், றிருவிடைமயங்கினன்சிவையைநல்கியே,மருகனென்றவனையான்மன்றவெள் ளினேன். (௨௧)

வேதநூல்விதிமுறைவிமலற்கீந்திடு, மாதியாமவிதனையளிக்கொணுதெனத் தாதையோன்வேள்வியிற்றடுத்தியானுமிவ, வேதமாமகந்தனையியற்றினேனரோ.()

தந்தைசொல்லாமெனுந்ததிசிவாய்மையை, நிந்தனைசெய்தனனீடுவேள்வியி ல், வந்தவென்மகடனைமறுத்துக்கண்ணுதன், முந்தையையிகழ்ந்தனன்முடி[illegible]தோ ர்கிலேன். (௨௩)

அன்றியும்வீரனின்றவியையீதியா, லென்றலுமவன்றனதெண்ணநோக்கியு நன்றெனவீந்திலன்மறையுநாடிலேன், பொன்றிடவந்தகொலினையபுந்தியே. (௨௪)

அல்லியங்கமலமேலண்ணலாதியாச், சொல்லியவானவர்தொகைக்குநோற்றிட வல்லபண்ணவர்க்கும்வேதியர்க்குமற்றவ, ரெல்லவர்தமக்குமோரிறுதிதேடினேன்.

துதிதருமறைப்பொருட்டுணிபுநாடியு, நதிமுடியமலனைநன்றுநிந்தியா விதுபொழுதிறப்பதற்கேதுவாயினேன், விதிவழிபுந்தியுமேவுமேகொலாம். (௨௬)

எனத்தருபரிசெலாமினைந்துதன்னுடை, மனத்தொடுகூறியேமாளுமெல்லையி, னினைத்தறிவின்மையைநிகழ்த்தினுவதென், னினிச்செயலென்னெனவெண்ணி நாடினன். (௨௭)

பாடுறுசாரதர்பரப்பும்வேள்வியி, னூடுறுவீரனதாமுஞ்சீற்றமுஞ் சாடுறுபத்திரைதகவுங்கண்ணுறீஇ, யோடுவதரிதெனவுன்னியுன்னிமேல். (௨௮)

சென்றதோருயிரொடுசிதைந்ததேவர்போற், பின்றுவனென்னினும்பிழைப் பதில்லையால், வன்றிறல்வீரன்முன்வன்மையாளர்போ, னின்றிடறுணிபெனத்த க்கனிற்பவே. (௨௯)

கண்மேற்றருவி [illegible]
கொண்டசீற்றமொடெ [illegible] த்தீருநமி
யண்டரோமேயெ [illegible] யிகழ்ந்தனையுந்தறுந்
றண்டமீதெனவாள்கொடேயவன்றலைதடிந்தான். (ருo)

அற்றதோர்சென்னிவீழ்முனிமறையனங்கையினுற்
பற்றியாயிடையமைரும்பாவகற்பாராத்
திற்றியீதெனக்கொடுத்தனன்கொடுத்தலுஞ்செந்தீ
மற்றொர்மாத்திரைப்போதினின்மிசைந்ததுமன்றே. (ருக)

மெல்லவேயெரியத்தலைநுகர்தலும்வேத
வல்லியர்தியாக்தினையியர்தக்கன்மாமகளிர்
சில்லிருங்குழற்ழ்வரச்செங்கரங்குலைத்தே
யொல்லையத்திறங்கண்டனர்புலம்பிவந்துற்றார். (ருஉ)

அந்தவேலையின்மறைக்கொடிதன்னைமுன்னனுவி
முந்திவார்குழையிறுத்தனளேனையர்முடியுந்
தந்தநங்கையர்சென்னியும்வாள்கொடேதடிந்து
கந்துகங்கள்போலடித்தனள்பத்திரகாளி. (ருங)

காளியாம்பெயர்த்தலைவியுங்கருதலர்தொகைக்கோ
ராளியாகியவீரனுமேனையண்டர்களைக்
கேளிராகியமுனிவரைத்தனித்தனிகிடைத்துத்
தாளிலார்ப்பினிற்றடக்கையிற்படைகளிற்றடிந்தார். (ருச)

மருத்துமூழியிலங்கியுமற்றெனமாது
முருத்திரப்பெருமூர்த்தியும்வந்தெனவுயர்சீர்
தரித்தவீரனும்பத்திரகாளியுந்தக்கன்
றிருத்தும்வேள்வியைத்தொலைத்தனர்தனித்தனிதிரிந்தே. (ருரு)

அண்ணறன்மையுந்தேவிதன்னிலைமையுமயரும்
விண்ணுளோர்சிலர்நோக்கியேயாங்கணும்விரவி
யண்ணுகின்றனர்யாரையுந்தொலைக்குநரம்மா
வெண்ணிலார்கொலாம்வீரனுமிறைவியுமென்றார். (ருசு)

இற்றெனாவிகழ்வேலையின்வீரனதிசைவாற்
சுற்றுதானையரித்திறநோக்கியேசூழ்ந்த
பொற்றைபோலுயர்காப்பினைவீட்டியுள்புகுந்து
செற்றமோடுசென்றார்த்தனர்வானுளோர்தியங்க. (ருஎ)

சூர்த்தநோக்குடைப்பூதருங்காளிகடொகையு
மார்த்தகாலையின்முனிவருந்தேவருமயர்ந்து
பார்த்தபார்த்ததோர்திசைதொறுமிரிதலும்படியைப்
போர்த்தவார்கடலாமெனவனைந்தடல்புரிய. (ருஅ)

வேறு.

தியக்குற்றனர்வெருளுற்றனர் [illegible] தெருள்பேர்ய்த்
துயக்குற்றனர்பிறக்குற்றனர்தொலைவுற்றனர்மெலிவா
மயக்குற்றனர்கலக்குற்றனர்மறக்குற்றனர்மனமே
துயக்குற்றனரிமையோர்களுமுயர்மாமுனிவரரும். (ருகூ)

அளிக்கின்றனர் [illegible] மக்கிளமயினவைய்
களிக்கின்றதொரினியோர் [illegible]
விளிக்கின்றனர்பறைக்கின்றனர்வெருக்கொண்ட [illegible]
டொளிக்கின்றனரவன்வேள்விதுறைருற்றதொர் [illegible] யோர். (௯௦)

அலக்கட்படுமிமையோர்களுமருமாமுனிவரு
நிலக்கட்படுமறையோர்களுநெடுநீர்க்கடலாகக்
கலக்குற்றனர்வரையாமெனக்கரத்தாற்புடைத்துநிர்த்தா
ருலக் * கிற்பிரளாகச்சினத்துயர்மாக்களியொத்தே. (௯௧)

முடிக்குந்திறற்பெருஞ்சேனாளிமுழங்கிற்றெனமுரணு
விடிக்கின்றனர்கலைமானெனவிமையோர்தமைவிரைவிற்
பிடிக்கின்றனரடிக்கின்றனர்பிறழ்புற்கொடுசிரத்தைக்
கடிக்கின்றனரொடிக்கின்றனர்களத்தைப்பொருகளத்தில். (௯௨)

முறிக்கின்றனர்தடந்தோள்களைமுழுவென்புடலுடலுங்
கறிக்கின்றனரடிநாவினைக்கனைகின்றனர்விழியைப்
பறிக்கின்றனர்மிதிக்கின்றனர்படுக்கின்றனர்சங்கங்
குறிக்கின்றனர்குடிக்கின்றனர்குருதிப்புனறனையே. (௯௩)

எடுக்கின்றனர்பிளக்கின்றனரெறிகின்றனரெதிர்போய்த்
தடுக்கின்றனருதைக்கின்றனர்தடந்தாள்கொடுதுகைத்துப்
படுக்கின்றனர்தலைசிந்திடப்படையாவையுந்தொடையா
விடுக்கின்றனர்மடுக்கின்றனர்மிகுமூனினைப்பகுவாய். (௯௪)

நெரிக்கின்றனர்சிலர்சென்னியைநெடுந்தாள்கொடுமிதியா
வுரிக்கின்றனர்சிலர்யாக்கையையொருசிற்சிலர்மெய்யை
யெரிக்கின்றனர்மகத்தீயிடையிழுதார்கடத்திட்டே
பொரிக்கின்றனர்கரிக்கின்றனர்புகைக்கின்றனரம்மா. (௯௫)

அகழ்கின்றனர்சிலர்மார்பினையவர்தங்குடர்சூடி
மகிழ்கின்றனர்நகைக்கின்றனர்மதர்க்கின்றனர்சிவனைப்
புகழ்கின்றனர்படுகின்றதொர்புலவோர்தமைக்காணு
விகழ்கின்றனரெறிந்தேபடையேற்கின்றனரன்றே. (௯௬)

கரக்கின்றதொர்முனிவோர்களைக்கண்டேதொடர்ந்தோடித்
துரக்கின்றனர்பிடிக்கின்றனர்துடிக்கும்படிபடிமேற்
றிரக்குன்றுகொடரைக்கின்றனர்தெழிக்கின்றனர்சிலரு
ணிரக்கின்றதொர்கழுகின்றொகைக்கீகின்றனர்மாதோ. (௯௭)

நெய்யுண்டனர்ததியுண்டனர்பாலுண்டனர்சீர்கேர்
துய்யுண்டனரிமையோர்கடந்தொகைக்காமெனவுய்க்கு
மையுண்டதொரவியுண்டனர்மகவேள்வியில்வந்தே
நையுண்டவருயிர்கொண்டிடுகொளுண்டவுரெல்லாம். (௯௮)

உகத்துக்கடையனலக்கடலுவர்சீர்தணித்தெனவே
மகத்திற்றிரிவிதவேதியில்லைவருங்கனலதனை
மிகத்துப்புரவுளதென்றுகொல்லியப்பார்தமதுயிரி
னகத்துப்புனல்விடுத்தேவிரைக்தவித்தார்மகமழித்தார். (௯௯)

* உலக்கு - வலித்தல்விகாரம்.

தடைக்கொண்டதொர்சிறைத்தோறுள்சாலைக்கதவெல்லா
மடைக்கின்றனர்தழலிட்டனரவனுற்றவர்தம்மைத்
துடைக்கின்றனர்கலசத்தொடுதொடர்கும்பமும்விரைவா
லுடைக்கின்றனர்தகர்க்கின்றனருதிர்க்கின்றனருவை. (௭0)

தவக்கண்டகத்தொகையார்த்திடத்தணிமாமகத்தறியிற்
றுவக்குண்டயரணிமேதகுதுகடர்பசுநிரையை
யவிழ்க்கின்றனர்சிலர்கங்கையினலையிற்செலவிடுவார்
திவக்கும்படிவாளோச்சினர்சிலவெற்றினர்படையின். (௭௧)

பங்கங்கள்படச்செய்திடுபதகன்மகந்தனிற்போய்க்
கங்கங்களைமுறிக்கின்றனர்கவின்சேரரமகளி
ரங்கங்களைக்கறிக்கின்றனரறுக்கின்றனரதனை
யெங்கெங்கணுமுமிழ்கின்றனரெறிகின்றனரெவரும். (௭௨)

படுகின்றவர்வருமூர்தியும்படர்மானமுந்தேருஞ்
சுடுகின்றனரவர்கொண்டிடுதொலைவில்படைக்கலமு
மிடுகுண்டலமுடிகண்டிகையெவையுந்தழலிட்டே
கடுகின்றுகளாகப்பொடிகண்டார்திறல்கொண்டார். (௭௩)

அடிக்கொண்டதொர்மகச்சாலையுளமர்வேதியையடியா
லிடிக்கின்றனர்பொடிக்கின்றனரிருந்தோரணத்தொகையை
யொடிக்கின்றனர்பெருந்தீயினையுமிழ்கின்றனர்களிப்பா
னடிக்கின்றனரிசைக்கின்றனர்நமனச்சுறுந்திறத்தோர். (௭௪)

தருமத்தினையடுகின்றதொர்தக்கன்றனக்குறவா
மருமக்களைப்பிடிக்கின்றனர்வாயாற்புகலொண்ணுக்
கருமத்தினைப்புரிகின்றனர்கரத்தாலவருரத்தே
யுருமுற்றெனப்புடைக்கின்றனருமிழ்வித்தனரவியே. (௭௫)

தறிக்கின்றனர்சிலதேவரைத்தலைமாமயிர்முழுதும்
பறிக்கின்றனர்சிலதேவரைப்பாசங்கொடுதறியிற்
செறிக்கின்றனர்சிலதேவரைச்செந்தீயிடைவதக்கிக்
கொறிக்கின்றனர்சிலதேவரைக்கொலைசெய்திடுங்கொடியோர். (௭௬)

நாற்றிக்கினுமெறிகின்றனர்சிலர்தங்களைநல்லூன்
சேற்றுத்தலைப்புதைக்கின்றனர்சிலர்தங்களைச்செந்நீ
ராற்றுக்கிடைவிடுக்கின்றனர்சிலர்தங்களையண்டப்
பாற்றுக்கிரையிடுகின்றனர்சிலர்தங்களைப்பலரும். (௭௭)

இடைந்தாரையும்விழுந்தாரையுமெழுந்தாரையுமெதிரே
நடந்தாரையுமிரிந்தாரையுநவையுற்றிடவிறந்தே
கிடந்தாரையுமிருந்தாரையுங்கிளர்ந்தாரையும்விண்மேற்
படர்ந்தாரையுமவர்க்கேற்றதொர்பலதண்டமும்புரிந்தார். (௭௮)

உலக்குற்றிடுமகங்கண்டழுதுளநொந்தனர்தளரா
மலக்குற்றிடுமணங்கோர்தமைவலிதேபிடித்தீர்த்துத்
தலக்கட்படுமலர்ப்பொய்கையைத்தனிமால்கரிமுனிவாற்
கலக்கிற்றெனப்புணர்கின்றனர்கணநாதரிற்சிலரே. (௭௯)

குட்டென்பதும்பிளவென்பதுங்கொல்லென்பதுங்கடிதே
வெட்டென்பதுங்குத்தென்பதுமுரியென்பதும்விரைவிற்
கட்டென்பதுமடியென்பதுமுதையென்பதுங்களத்தே
யெட்டென்பதோர்திசையெங்கணுமெவரும்புகல்வனவே. (௪௦)

கையற்றனர்செவியற்றனர்காலற்றனர்காமர்
மெய்யற்றனர்நாவற்றனர்விழியற்றனர்மிகவு
மையுற்றிடுகளமற்றனரல்லான்மலரயன்சேய்
செய்யுற்றிடுமகத்தோர்களிற்சிதைவற்றவரிலையே. (௪௧)

வேறு.

இத்திறம்யாரையுமேந்தருனையும், பத்திரைசேனையும்பரவித்தண்டியா
மெத்துறுமனைகெழுவேலையிற்பல, மத்துறுகின்றெனமகத்தைவீட்டவே. (௪௨)

செழுந்திருவுரத்திடைதெருமந்துற்றிடத், தொழுந்திறற்பரிசனர்தொலையமாயவ
னழுந்திடுகவலொடுமெயர்வுயிர்த்தவ, னெழுந்தனன்மகம்படுமிறப்புநோக்கினான். ()

திருத்தகும்வேள்வியைச்சிதைவின்றாகயா, னருத்தியிற்காத்ததுமழகிதாலெ
னக், கருத்திடையுன்னினன்கண்ணன்வெள்கியே,யுருத்தனன்மானமின்றுளத்தை
யீரவே. (௪௪)

பரமனையிகழ்ந்திடுபொன்மையோர்க்கிது, வருவதுமுறையெனமனத்துட்கொ
ண்டிலன், றெருமருமுணர்வினன்றிறல்கொள்வீரன்மேற், பொருவதுகருதினன்
பொருவிலாழியான். (௪௫)

உன்னினன்கருடனையுடைந்ததாதலுந், தன்னுறுசீற்றமாந்தழலையாங்கொரு
பொன்னிருஞ்சிறையபுள்ளரசனுக்கலு, மன்னதுவணங்கியேயரிமுனின்றதே. ()

நிற்றலுமதன்கையினீலமேனியான், பொற்றடந்தாள்வையாப்பொருக்கென்
றேறியே, பற்றினனேம்பெரும்படையும்வேள்வியுண், முற்றுறுபூதர்மேன்முனிவு
ற்றேகினான். (௪௭)

எடுத்தனன்சங்கினையிலங்குசெந்துவ, ரடுத்திடுபவளவாயாரச்சேர்த்தியே, படுத்த
னன்பேரொலிபரவைத்தெண்டிரைத், தடக்கடலுடைந்திடுதன்மைபோலவே. ()

மீச்செலுமமரர்கள்புரிந்தவேள்வியந், தீச்சிகையுதவியசிலையைவாங்கியே
தாச்செலும்வசிகெழுசரங்களெண்ணில, வோச்சினன்வீரனதுரவுத்தானைமேல். ()

காளிகடொகைகளுங்கழுதினீட்டமுங், கூளிகடொகைகளுங்குழுமியேற்றெதிஇ
வாளிகடொகைசொரீஇமாயற்சூழ்வுறா, நீளிகல்புரிந்தனர்நிகரில்வண்மையார். (௫௦)

தண்டுளவலங்கலந்தடம்பொற்றோளுடை, யண்டனுந்தன்படையனைத்துநேர்கொ
டு, மண்டமர்புரிதலைமற்றவெல்லையிற், கண்டனனைகைத்தனன்கடவுள்வீரனே. ()

வெருவரும்பெருந்திறல்வீரன்றண்டுழா, யரியொடுபோர்செயவாதிநாயகன்
றிரைகடலுலகமுஞ்சிறிதுதானென, வொருபெருந்தேரினையுய்த்திட்டானரோ. ()

பாயிரந்தானெனப்பகரும்வேதமா, மாயிரம்புரவிகளளப்பில்கேதனங்
காயிரும்படைகண்மீக்கலந்ததாகிய, மாயிருந்தேரவண்வல்லைவந்ததே. (௫௩)

தேரவண்வருதலுந்திறல்கொள்வீரனுற், பாரிடைவீழ்ந்தயர்பங்கயாசன
னுருயிர்பெற்றெனவறிவுபெற்றெழீஇ, நேரறுமகம்படுநிகழ்ச்சிநோக்கினான். (௫௪)

அரிபொருநிலைமையுமாடல்வீரன, துருகெழுசெற்றமுமும்பர்தன்னிடை
யிரதம்வந்திட்டதும்யாவுநோக்கியே, கருதினன்யானுயுங்காலமீதெனா. (௫௫)

விண்ணிழிதேரிடைவிரைவினான்முக, னண்ணினன்வலவனினகைமுட்கோல்கொடு, துண்ணெனநடத்தியேதொழுதுவீரனும், புண்ணியன்றனக்கிதுபுகறன் மேயினான். (கூசு)

நீறணிபவளமெய்ந்நிமலனிற்கிதோர், வீறணிதேர்தனைவிரைவினுய்த்தனன்
றேறலர்தமையடுந்திறல்கொள்வீரநீ, யேறுதிதுணைவியோடென்றுபோற்றினான்.()

போற்றினனிரத்தலும்பொருவில்வேதன்மேற், சீற்றமுள்ளதிலொருசிறிதுநீங்கியே, யாற்றல்கொள்வீரனெம்மன்னைதன்னுட, னேற்றமொடதன்மிசையிமைப்பின்மேவினான். (கூஅ)

மேவியகாலையில்வெலற்கருந்திறற், சேவகவடியனேன்றிறத்தைக்காண்கெனத்
தாவகறேரினைத்தண்டுழாய்முடிக், காவலன்முன்னுறக்கடாவியுய்ப்பவே. (கூகூ)

வரனுறுநான்முகவலவனுய்த்திடு, திருமணித்தேர்மிசைத்திகழ்ந்தவீரன்முன்
னொருதனிவையமேலும்பர்க்காகவே, புரமடவருவதோர்புராரிபோன்றனன். ()

எல்லையில்பெருந்திறலிறைவனேறுதே, ரல்லியங்கமலமேலண்ணலுய்த்திடச், சொ
ல்லருந்தானையின்றொகையைநீக்கியே, வல்லைசென்றிறுத்ததம்மாயன்முன்னரே.()

பாருலகளவினும்பரந்தபைம்பொனந், தேரவணெதிர்தலுந்திருவுலாவிய
காருறழ்மேனியங்கண்ணன்கண்ணுதல், வீரனைநோக்கியோர்மொழிவிளம்பினான்.

வேறு.

தெழித்தவார்புனற்கங்கையஞ்சடைமுடிச்சிவனைப்
பழித்ததக்கனையடுவதல்லாலவன்பாலி
விழுக்கிறேவரையடுவதென்வேள்வியையெல்லா
மழித்ததென்னைநீபுகலுதியாலெனவறைந்தான். (கoங)

பாடல்சான்றிடுமாலிதுபுகறலும்பலரு
நாடுதொல்புகழ்வீரனன்றிதுவெனநகையா
வீடுசேரிமிலேறுடன்வயப்புலியேறொன்
றூடல்செய்தல்போலொருமொழியுரைத்தனனன்றே. (கoச)

எல்லையில்லதோர்பரமனையிகழ்ந்தவனியற்று
மல்லல்வேள்வியிலவிநுகர்ந்தோர்க்கெலாமறைமுன்
சொல்லுதண்டமேபுரிந்தனநின்னையுந்தொலைப்பாம்
வல்லையேலதுகாத்தியென்றனனுமைமைந்தன். (கoரு)

வீரனிங்கிதுபுகறலுஞ்செங்கண்மால்வெருண்டு
பாரவெஞ்சிலைகுனித்தனனாணொலிபடுத்தி
யாரும்விண்முகிலொன்றுதன்வில்லொடுமெப்பு
மாரிபெய்தெனப்பகழியாற்பூதரைமறைத்தான். (கoசு)

கணங்கடம்மிசைமால்சரம்பொழிதலுங்காணூஉ
வணங்குதன்னொடுநகைசெய்துவீரனுமமலன்
பணங்கொள்பஃறலைப்பன்னகக்கிறைவனாற்படைத்த
குணங்கொண்மேருவேயன்னதோர்பெருஞ்சிலைகுனித்தான். (கoஎ)

செற்றமீக்கொளவையன்வில்வாங்கினன்சிறிதே
பற்றிநாணொலியெடுத்தலுமொடுங்கினபரவை
பொற்றையாவையுங்கீண்டனதுளங்கினபுவன
மிற்றைவைகலோவிறுதியென்றயர்ந்தனரெவரும். (கoஅ)

கோளிலாகியபுற்றிடையோரராக்குறுகி
மீளில்வெஞ்சினக்குழவிகொண்டேகலின்வீரன்
றோளில்வாங்கியசிலையினிற்றாணியிற்றுதைந்த
வாளிவாங்கியுய்த்தொருதனிமாயனைமறைத்தான். (௧௦௯)

செங்கணான்றனைமறைத்தபின்மற்றவன்செலுத்துந்
துங்கவெங்கணையாவையும்பொடிபடத்தொலைப்ப
வங்கொராயிரம்பகழியையைதெனப்பூட்டி
யெங்கணாயகன்றிருமணிப்புயத்தினேரெய்தான். (௧௧௦)

எய்யும்வெங்கணையாவையும்வீரருளிறையா
மையனாசுகமாயிரமோச்சினனகற்றி
யொய்யெனக்கரியோனுதன்மீமிசையொருதன்
வெய்யபொத்திரமேவினனவனுளம்வெருவ. (௧௧௧)

ஏவுதொல்கணைமாயவனுதலிடையிமைப்பின்
மேவுகின்றுழியனையவன்றளர்தலும்வீரன்
வாவுதேர்மிசையூன்றினன்சிலையைவார்கணையுந்
தூவுகின்றிலன்மாலிடர்நீங்குறுந்துணையும். (௧௧௨)

இன்னலத்துணையகன்றுமாலெதிர்தலுமெமது
மன்னுநேர்ந்தனனிருவரும்வரிசிலைவளைப்பாப்
பொன்னின்வாளிகள்பொழிந்தனர்முறைமுறைபொருதா
ரன்னபான்மையர்செய்தபோர்யாவரேயறைவார். (௧௧௩)

மாறுகொண்டபோரிவ்வகைபுரிதலும்வயத்தால்
வீறுகொண்டுயர்முக்கணன்வெய்யதீவடவைக்
கூறுகொண்டதோர்படையினையோச்சலுங்குவட்டி
லேறுகொண்டலையனையவனுரத்திலெய்தியதே. (௧௧௪)

எய்துகாலையிலுளம்பதைபதைத்திடவிரங்கி
வெய்துயிர்ப்புடனுணர்வொரீஇயுளநனிமெலிந்து
நொய்தின்மையலைநீங்கலுமுகுந்தனைநோக்கிச்
செய்திபோரெனவுரைத்தனன்சரபமாந்திறலோன். (௧௧௫)

மெய்வதத்தினையாவர்க்கும்விரைவினிலிழைக்குந்
தெய்வதப்படைமுழுவதுஞ்செங்கண்மால்செலுத்த
வவ்வனைத்தையுமனையவப்படைகளாலகற்றிக்
கவ்வைமுற்றினனுதல்விழியளித்திடுங்கடவுள். (௧௧௬)

வே று.

தேன்றிகழ்பங்கயத்திருவினாயகத்
தோன்றறன்படைக்கலந்தூண்டவெங்கணாஞ்
சான்றெனநின்றவன்றனயன்வீரமாம்
வான்றிகழ்படைதொடாவலைமாற்றவே. (௧௧௭)

அரியதன்பின்னுறவாதிவீரன்மேற்
பொருகணையளப்பிலபொழியமாற்றியோர்
சரமதுசெலுத்திமால்சார்ங்கமொன்றையு
மிருதுணிபடுத்தினனிறைவன்மைந்தனே. (௧௧௮)

பின்னுமத்துணைதனிற்பெருந்திறற்பெயர்
முன்னவனிருகணைமுறையிறேச்சியே
பன்னகமிசைத்துயில்பகவனூர்திதன்
பொன்னிருஞ்சிறையினைப்புவியில்வீட்டினான். (கககூ)

ஆயதோரமைதியிலாழியங்கையான்
மாயவனுதலின்வரம்பில்கண்ணரை
மேயினகாதலின்விதிப்பவீரன்முன்
பாயிருண்முகிலெனப்பரம்பினாரரோ. (க௨0)

அங்கவர்யாரையுமமலன்வெய்யகட்
பொங்கழல்கொளுவிநுண்பொடியதாக்கலும்
பங்கயவிழியினன்பரமனன்றருள்
செங்கையிலாழியைச்செல்கென்றேவினான். (க௨க)

விடுத்ததோர்திகிரியைவீரனங்கையாற்
பிடித்தவண்விழுங்கினன்பெயர்த்துமாயவ
னெடுத்திடுகதையினையெறியவன்னது
தடுத்தனன்றனதுகைத்தடம்பொற்றண்டினால். (க௨௨)

வேறு.

சங்கார்செங்கைப்புங்கவனேவுந்தண்டம்போய்
மங்காவங்கண்வீழ்வதுகாணாவாள்வாங்கிப்
பொங்காநின்றேயுய்த்திடவெய்தும்பொழுதின்க
ணுங்காரஞ்செய்திட்டனனம்மாவுமைமைந்தன். (க௨௩)

ஒய்யென்றையன்சீற்றமொடங்கணுங்காரஞ்
செய்யுங்காலத்தோவியமென்னச்செயனீங்கிக்
கையும்வாளுமாயவனின்றான்கடலூடே
வையம்முண்டுகண்டுயில்கின்றமாமாயன். (க௨௪)

சான்றகன்மாயனச்சுறவெய்தித்தளர்காலை
மூன்றுகண்வீரன்யாதுநினைந்தோமுனிவெய்த
வான்றதொர்செற்றநீங்குதியென்னவண்டத்தே
தோன்றியதம்மாகண்ணுதலீசன்சொல்லொன்றே. (க௨௫)

அந்தரமீதேவந்திடுசொல்லங்கதுகேளா
வெந்தைமனங்கொள்வெஞ்சினநீங்கியிடுபோழ்தி
லந்தின்மணித்தேருய்த்திடுபாகனதுநோக்கி
வந்தனைசெய்தேபோற்றியொர்மாற்றம்வகுப்பானால். (க௨௬)

வேறு.

அறத்தினையொருவிச்செல்லுமழிதகனுலகமெல்லா
மிறத்தலையெய்தவிங்ஙனியற்றியமகத்தின்மேவிப்
பெறத்தகுமவியைநுங்கும்பெதையேன்பிழையையெல்லாம்
பொறுத்தனைகொண்மோவென்னுப்பொன்னடிக்கமலம்பூண்டான். ()

பூண்டிடுமுலகந்தந்தபுங்கவன்றன்னைநோக்கி
யாண்டகைவீரனஃதேயாகவென்றருளலோடு
நீண்டதோர்மாயனன்னுனீடருணிலைமைகாணூஉ
வீண்டிதுகாலமென்னுவேத்தினைவியம்பலுற்றான். (க௨௮)

பாரவெஞ்சிலையும்வீட்டிப்பல்படைக்கலமுஞ்சிந்திச்
சேரலருயிர்களுண்டதிகிரியுஞ்செல்லநங்கிப்
போரிடையெனையும்வென்றுபுகழ்புனைந்திடுதியென்றால்
வீரநின்றகைமையாரேமுடிவுறவிளம்பவல்லார். (கஉக)

ஆசறுநெறியினீங்குமயன்மகனியற்றுகின்ற
பூசனைவிரும்பிவேள்விபுகுந்தனன்புந்தியில்லேன்
மாசறுபுகழாய்நின்னான்மற்றிதுபெற்றேனந்தோ
வீசனையிகழ்ந்தோர்தம்பாலிருப்பரோவெண்ணமிக்கோர். (கக0)

ஆதிநாயகனையொல்லாரனையவர்ச்சேர்ந்தார்க்கெல்லாம்
வேதமேயிசையாநிற்கும் வியன்பெருந்தண்டமன்றோ
வீதெலாமெம்மனோர்பாலியற்றியவினையதன்மை
நீதியாலெம்பாலன்றிநின்கணோர்குறையுமுண்டோ. (ககக)

விழிதனின்முறுவறன்னின்வெய்துயிர்ப்பதனிலார்ப்பின்
மொழிதனிற்புவனமெல்லாமுதலொடுமுடிக்கவல்லோய்
பழிபடுவேள்விதன்னிற்பலரையும்படையினோடு
மழிவுசெய்திட்டதம்மாவடிகளுக்காடலன்றோ. (கக௨)

உறுநர்தந்தொகைக்குவேண்டிற்றுதவியமுதல்வனேவு
முறையதையுன்னிவேள்விமுடிப்பதோராடலாகச்
சிறிதெனுமளவைதன்னிற்சிதைத்தனையன்றியெந்தா
யிறுதிசெய்திடநீயுன்னின்யார்கொலோவெதிர்க்குநீரார். (கக௩)

இறுதிசெய்திடலேசீற்றமின்பமேயாண்மையென்று
மறைதருசத்திநான்காமரன்றனக்கையகாளி
முறைதருகவுரியின்னோர்மும்மையும்பெற்றோரேனைப்
பெறலருஞ்சத்தியாணிப்பெற்றியுமறைகள்பேசும். (கக௪)

அன்னதோர்பரிசாலீசனரும்பெருஞ்சத்தியென்னிற்
பின்னமன்றவற்கியானும்பெரிதுமன்புடையேன்முக்கண்
முன்னவன்றன்பாலீண்டென்மொய்ம்புடனிழந்தநேமி
யின்னுமங்கவன்றுளர்ச்சித்திமைப்பினிலெய்துகின்றேன். (கக௫)

முனிவுடனடிகளீண்டுமுறைபுரிந்ததனுக்கின்னன்
மனனிடைகொள்ளேனின்னான்மற்றிதுபெறுதலாலே
புனிதமாக்கொள்வன்றண்டம்புரிந்தனைபொறுத்திகுற்ற
மினியருள்புரிதியென்னாவிணையடியிறைஞ்சலோடும். (கக௬)

வீரருள்வீரன்மாலோன்விளம்பியமாற்றங்கேளா
நாரணற்கன்புசெய்துநணியதோர்காலைதன்னிற்
பாரிடஞ்சூழநந்திபரவிடவுமையாளோடு
மூரிமால்விடைமேல்கொண்டுதோன்றினன்முடிவிலாதான். (கக௭)

தேங்கியகங்கைசூடுஞ்செஞ்சடைக்கடவுடோன்ற
வாங்கதுதெரிந்தவீரனச்சமோடங்கைகூப்பிப்
பாங்குறநிற்பமாலும்பங்கயத்தயனுந்தாழா
நீங்கியதாயைநேருங்குழவியினிலையரானார். (கக௮)

